உ

கணபதி துணை!

# அகத்திய முனிவர்

அருளிச்செய்த

# பரிபாஷைத்திரட்டு

## ஐந்நூறு.

இஃது.

தஞ்சாவூர்

சாமிசெட்டியாரவர்களால்

பிழையறப்பரிசோதிக்கப்பட்ட பிரதியைக்கொண்டு

ஆறுமுகமுதலியாரால்

பரிசோதிக்கப்பட்டு.

தஞ்சாவூர்.

அப்புகுட்டி செட்டியார்

கனிஷ்டபுத்திரராகிய

கன்னையசெட்டியாரால்

திருவொற்றியூர்
இருசப்பமுதலியார்
குமாரர்
பரசுராமமுதலியாரது
பரப்பிரமமுத்திராக்ஷரசாலையிற்
பதிப்பிக்கப்பட்டது.
௧௮௭௮௵ - மார்ச்சி௴

[illegible] 1/10
[illegible] 1/2
[illegible] 1/4
[illegible] 1/4
[illegible] 1/10
[illegible] 1
[illegible] 1
[illegible] 1/4
[illegible] 1/4

3/4 [illegible] 1/8 [illegible]

# விளம்பரம்.

இதனடியில்கண்டிருக்கும் - தமிழ்- தெலுங்கு-புஸ்தகங்கள் சென்னப்பட்டணம் பெத்துநாயக்கன் பேட்டை மன்னருசாமி கோவில் தெருவில் - ௫௭ - வது - கதவிலக்கமுள்ளவீட்டில்- தஞ்சாவூர் கன்னையசெட்டியாரால் விற்பனைசெய்யப்படுகின்றது.

| தமிழ்புஸ்தகங்கள். | தெலுங்குபுஸ்தகங்கள். |
|---|---|
| சின்னசாமிதாசர்கீர்த்தனை * | தேசிங்குராஜன்கதை * |
| ஜினேந்திரமாலை * | சாரங்கபாணிபதம் * |
| பரிபாஷைத்திரட்டு * | வோடப்பாட்டுகள் * |

இதனால் சகலத் திராளுக்கும் தெரிவிப்பது தென்ன வெனில் தன்வந்திரிபகவான் திருவாய் மலர்ந் தருளிச்செய்த பாலவாகட மென்னும் சிமிட்டுரத்தினச் சுருக்கம் முந்நூற்றறுபதும் மேற்படியா ரருளிச்செய்த வயித்திய சிந்தாமணி பிண்ட வுற்பத்திநாடிக்கோர்வையுடன் ஆயிரத் திருநூறும் அகஸ்தியமகாமுனிவர் திருவாய்மலர்ந்தருளிய வயித்திய வல்லாதி-அறுநூறும் அச்சியற்றியிருக்கின்றன, இதன்றி இப்போதுபதிப்பித்துவரும்புத்தகமாவன

இன்னம்சில புத்தகங்களும் பதிப்பித்து வருகின்றேன்இப் புத்தகங்கள் வேண்டியவர்கள் சென்னப்பட்டணத்தைச் சார்ந்த சூளைவீரணன் தோட்டம் தொட்டிக்கலை குமரப்ப முதலிதெருவில் (௫௯) கதவிலக்க முள்ளவீட்டில் இங்கிலீஷ் புத்தக வியாபரஞ்செய்யும்-தி-இருசப்பமுதலியார்-குமாரர்- பரசுராமமுதலியாரிடத்தில் விலைக்குவாங்கிக்கொள்ளலாம்.

விபவவரு }
மாசிமீ }

இங்ஙனம்.
சூளை - பரசுராமமுதலியார்

# பரிபாஷைத்திரட்டின் பொருளடக்க அகராதி.

## பரிபாஷைத்திரட்டின் பொருளடக்க அகராதி.



---

பரிபாஷைத்திரட்டின்

பொருளடக்க அகராதி

முற்றிற்று.

உ

கணபதிதுணை.



# அகத்தியமுனிவர்

அருளிச்செய்த

# பரிபாஷைத்திரட்டு.

## முதற்காண்டம்.

காப்பு.

பரமஞானோதயத்துப் பரஞ்சுடருலகுக்கெல்லாம்
திரமதாவுதித்தஞான திவாகரன் திருத்தாள்காப்பு
வரமதாம்வகாரயோக மறைப்புநூற்பாடையெல்லாம்
முருகவிழ்தமிழாற்செய்யமுருகனைங்கரர்தாள்காப்பே

பாயிரம்.

காப்பெனவுரைத்தவாதக் கணக்கொருலட்சந்தன்னைச்
சேர்த்ததுபாதியாகத் திரட்டியே நூலையெல்லாம்
நாற்பத்துமூன்றுமொன்று நடத்தியகாண்டந்தன்னைப்
பார்த்திடினைந்நூறாகப் பாடை நூல்படித்திட்டானே (௧)

படிக்குமிந்நூலுக்கொப்பாம் பராபரமொன்றேயல்லால்
மடத்தினிலுள்ளசித்தர் வாதநூலிதற்கொவ்வாது
குடத்தினிற்றீபம்போலுங் கூறுநற்சித்தர்பாடை
திடத்தபொன்மேருவுச்சித் தீபமாமிந்நூலன்றே (௨)

இந்தநூலைந்துகாண்டத்தியம்பியகருவேதென்றால்
சந்தேகந்தீர்க்கவேண்டித் தமிழ்க்கவியைஞ் ஞாற்றுக்குள்
மந்திரவாதயோக மணியஞ்சீகரணமார்க்கம்
சிந்தைசெய்வகாரபாடை தீட்சையுஞ்செப்புமாதோ (௩)

நூல் - வேறு.

செப்பியதோர் வகையென்ன நூலின்மேலாந்-தீட்சையொ
டுவகைபாகஞ் சேர்மானங்கள்-தப்பிலாக்குருமுடிக்குங் கருமானங்
கள்-தத்துவபஞ்சீகரணந் தாக்கநோக்கும், ஒப்புவமையில்லாதம
வுனக்கூறோ-டுறுதியுள்ள வட்டாங்கயோகக்கூறு, மெய்ப்புடைய
காயகற்பசமாதிக்கூறு-வெறியேறியோடுமணிவேதைக்கூறே (௪)

கூறானகாலங்க ளிடைபாகங்கள் - குருசீடபக்குவங்கள் பிரமாணங்கள், பேறானசித்தியிலே யிருபத்தைந்தும் - பிரபலமா னான்மறைவுச்சந்தேகங்கள், நீறாகவெளியிட்டுச் சொன்னவாற்றா-னி கண்டெனவுஞ் சித்தரிதை நினைவுள்வைத்தார், ஆறாறுமறு நூறுங்கற்ப நூறு-மாயிரமுமுந்நூறு மடக்கஞ்செய்யே. (௫)

அடக்கமுள்ளசூத்திரங்க ளின்னுங்கேளு-வாயிரத் தோடிரு நூற்றைந் நூற்றின் மேலொன், றுட னுக்குளுயிர் முப்பத் தொன்றெண்பத்தொன்- றுற்றபதினொன்று நானூற்றொன்று, கோதறுசீர்மதிவெண்பாக்கவிதை நூறு-குருநூலைம்பதுமதுவோர்கோவையாகக், கிடைப்பதிலைபூர்வதவப் பயனாலெய்துங் - கிடைத்திடினிந் நூல்பதனங் கெதிகொள்வோர்க்கே (௬)

கெதியறியாப்பாவிகட்கிந் நூல்கிட்டாது-கிருபையுள்ளஞானிகட்கே யெய்துமெய்தும், பதியறிய நன்மவுன யோகிகட்கே-பரிசுத்த நூலினதான் பதனம்பண்ணும், விதியிலை யென்றெண்ணாதே நூலைத்தேடிவிண்டு விண்டுபேசாதே வேண்டாம் வேண்டாம், நிதிதருவாருபசார நீக்கிப்போடு - நினைவுகொண்டு சூத்திரத்தி னினைவைப்பாரே. (௭)

நினைவிலேயிருப்பதொன்று சொல்வதொன்று-நெஞ்சிரக்கமில்லாத சித்தர்பாடை, கனவிலேகண்டபொருள் போலவப்பா காட்டினார் சூத்திரத்திற் கபடமாக, அனலிலேகிருமி சொல்லா வாறுபோலவமிர்த மொழிக்கெதிர் மொழிசொல்வாருமில்லை, பனியை நம்பியுழுதவந்தக் கதையைப்போலப் - பாடினார் மறைபொருளாய்ப்பாடினாரே. (௮)

பாடுகின்றசித்தர்தம் நூல்களெல்லாம் - பரிபாடை தெரியாத பாவியோர்க்குத், தேடுகின்றபொருளழிபச் சொன்னதல்லாற்றினையளவு பொன்காணச் சொல்லவில்லை, வீடிழந்து மாடிழந்துஉள்ளசெம்பொன்-வேணதெல்லாந்தானிழந்து மெய்தோன்றாமல், காடுறைந்துபோவதற்கோ பெரியோர்சொல்வார்-காணாமற் புதைத்தசொல்லைக் கண்டுதேறே. (௯)

கண்டுகண்டுதேறினவ ரநேகருண்டு-கருவறிந்துசெய்தவர்களநேகருண்டு, தொண்டுசெய்துபெற்றவர்களநேகருண்டு-தொல்லையென்றுவிட்டவர்களநேகருண்டு, விண்டுசொலா தடங்கினவரநேகருண்டு வீண்கரிசுட்டுத் திரிவாரநேகருண்டு, பண்டுவிட்டகுறைகள்வந்து நேர்ந்ததானாற், பலிக்குமல்லால்வீணருக்கும்பாழதாமே. (௰)

பாழ்நெஞ்சுபெற்றகரு மிகளெல்லாரும்- பாரதனில்ரசவா
தமறிவோமென்று, நாளிலொருவர்க்கொருவ ருறவுகூடி-நலமில்
லாச்சூத்திரங்க ணன்றாய்ப்பேசி, நீள்புவியி லெமயோப்பா
ரொருவருண்டோ- நீரறிந்த வித்தைவெகு நேத்தியென்றுந்; தா
ள்பெறுநற்கும்பகநா மறிவோமென்றுஞ் - சாராயந் தனைச்குடி
த்துச்சண்ணுவாரோ. (௰௧)

சண்ணினமேதயல்லாமற் சூத்திரத்தின் - சமுசயங்சடாந்தெ
ளிந்துசார்ந்தோரில்லை, எண்ணி யெண்ணி யவரவர்க டமதுபத்
திக்-கேற்றபடிபார்த்தலைந்தி டைவதல்லால், மண்ணிலெழுபிறப்
பாகும்பிரமகற்பம் - வானைவிட்டுக் கீழிறங்குங்கற் சுண்ணுப்பும்,
விண்ணவர்க்குமருந்தான சாணைப்பாப்பும்- வெளியில்வெளியா
ணவர்க்கே விள்ளுந்தானே. (௰௨)

விள்ளுமேயாதியிலே யொளியுமாச்சு - வெந்தழலாமறுபி
றப்புநீலமாச்சு, கள்ளமதா யிறப்பிறட்டுச் சிவப்புமாச்சு - காங்
கைகொண்டுமறுபிறப்பு வெள்ளையாச்சு, துள்ளியது பின்பிறப்பு
மஞ்சளாச்சு - தோகைமயினிறமாச்சு மறு பிறட்பில், உள்ளபடி
கடைசியெழு பிறப்பிற்றானு - முயற்கோழிமுட்டை நிறம்படிக
மாச்சே. (௰௩)

படிகமென்ற வண்டமெல்லாம் பிரமகற்பம்- பார்க்கவென்
றாலாகாசப் பிரமவிந்து, குடியிருக்கு மிடந்தானே பூமியாகுங்-
கொண்டலினா லவதரித்த குருதானையா, அடியறிந்தா லதின்கீழே
வானவன்னி - யக்கருவைக்கண்ட வனே யருள்மெய்ஞ்ஞானி, திட
மானவெழுபிறப்பாய் நின்றமூர்த்தி - சித்திரையில் வெண்சாணை
ச்செழுந்தண்ணீரோ. (௰௪)

தண்ணீருஞ் சுண்ணுப்புந் தானேசேர்ந்தாற் - சகலசித்துங்
கைவசமாய்த் தானேசிக்கும், மண்ணுடும் விண்ணுடு மோன்
றானால் - வாதமடாவெளியாச்சுமாய்கைபோச்சு, பெண்ணுரு
ம்புருடருமே சேர்ந்தாரானாற்-பிள்ளையொன்று போல்போலே
பிறக்கலாச்சு, கண்ணாரும்பிள்ளைபிதா சூரியன் ருண்-சனைவிலேபிற
ந்தவகை காட்டினேனே. (௰௫)

காட்டினேன்சிருட்டிசெய்யப்பிரமனென்றங்-கற்சுண்ணம்
பிரமகற்பச் கல்லாமென்றும், மூட்டினேன் மூலவிந் தயனேபூ
மி-மூச்சில்லைபேச்சில்லை மவுனத்தாயாங், கோட்டி கொள்ளுநா
ன்முகத்தன் வயிற்றுக்குள்ளே-குடியிருந்தா னுருத்திரனுமாலுங்
கூடி, ஆட்டுகிறவாட்டெல்லாம் பிரமசித்தே-யவன்பிறப்புப்பூத
வங்கி சத்தைக்கேளே. (௰௬)

## பூதவங்கிசவிபரம்.

அங்கிசத்தில்வந்ததுதான்மண்ணேயாச்சு-தப்பூதமொருமுளையங்குதிக்கலாச்சு, பங்கிட்டவம்முளையேயிலைபூவாச்சு - பருமலரோகாய்பழமாய்விந்துமாச்சு,திங்களெனும்விந்துதான்ரசமுமாச்சு-தெளிந்தரசந்தானுமுருண்டுதிரமாச்சு,சங்கையில்லாதுடலாச்சங்குயிருமாச்சு-தன்னுடலிற்சீவசெந்து கோடியாச்சே ()

கோடியென்றுலெத்தனையென் றுரைப்பேனையா-கூர்ந்துபார்நாலுவித யோனிக்கூத்தை;ஆடிநின்றமகாபூத வண்டவித்தாலப்பனே பிறந்ததுகாண் பிண்டவித்துத், தேடிநின் றலைவானேனுனக்குள்ளேயே- செலங்குதித்துப் பனிநீர்போற் செயநீராச்சுஓ;டியவோர்பிரமகற்புக்கற்சுண்ணும்புக்-குயர்ந்தசிவ தீட்சையிந்தச்செயநீராமே. (௰௮)

செயநீருஞ்சுண்ணும்புஞ் சேர்ந்துகொண்டாற்-சிவசிவாகுருவாச்சு சிவனுமாச்சு, மயமானமுப்பூவென் றுரைத்தசெய்தி-வகைதெரியச்சொல்வதற்கென் வாய்கூசாதோ;தயவாக நானுரைத்தேனிந்தமட்டுஞ்-சமுசயங்கடூரவென்றுற் கடைக்காண்டம்பார் உயிரிருக்கு மிடந்தானே பிரமகற்ப-முடலிருக்குமிடந்தானேபிண்டவித்தே. (௰௯)

வித்துக்குணின்றரச மப்புமாச்சு-விண்ணிழிந்துவந்தரசமுப்புமாச்சு, சத்தித்தவிடந்தனிலே யெல்லாமுண்டு- சாகாதகாருனே சவர்க்காரந்தான், புத்திக்குந் தோன்றுதேற் புலத்தியாகே பொருளையிந்தநூன்முடிவுக் கடைக்காண்டம்பார், இத்தைவிட்டு நூல்பாடை யாதிபுக்க - கெடுத்தபரி பாடையெல்லா மியம்புவேனே. (௨௰)

இயம்புகின்றேன்சித்தர்தமநூலின்பாடை-யிலங்குண்டோ கணக்குண்டோ ரசவாதத்தில், சுயம்பென்றவுப்புக்குச் சித்தர்கூடிச்சொன்னவொரு பாடையெல்லாஞ் சொல்வேன்மைந்தா, பயம்பிடிக்குஞ் சித்தர்கடங் கோபத்தாலே - பழிவருமென் றரன்மேலே பாரம்வைத்து, நயம்பெறவே சொல்லிவைத்தே னைந்நூற் றுள்ளே-நாதர்கடாமெனைக்கடிந்து நகைத்திட்டாரோ.(௨௧)

நகைத்தவர்களாரொன்றுற் புலத்தியாகே-ணவதாதர் சித்தர்முதற் பதினெண்பேரும், செகத்திலுறுமால்கனகஞ் சமலைசித்தர்-திருமூலவர்க்கமற்றச் சித்தரெல்லாம், பகைத்தெங்க ளுரற்பாடைக் கருவையெல்லாம்- பாரதனிற் கோள்சொல்லப் பண்போவையா, அகத்தியமாமுனிபுனக்குத் தெரியாதோதா-னைந்நூறுங் குகைமறவென்றருளினனே. (௨௨)

## நூற்கோவை.

அருளினவோ ராத்நூறும்யாருக்கென்று-லகக்கடந்தமெய்ஞ்ஞானி யருள்பெற்றோர்க்குக்;குருமுகமாய்க் கொடுப்பதல்லான்மற்றோர்கையிற்-கொடுத்தவர்க்கும் பெற்றவர்க்குஞ் சாபங்கூறிப் பெருமையுள்ளசித்தர்தமை வணங்கிப்போற்றிப் - பிரமன்றனுத்தரவுதன்னாலிந்நூல், கருவறியுஞானிகட்கே வெளியிட்டேனாற்-கையடக்கமாகவைத்துக் கண்டுதேறே. (௨௩)

தேறவேயிந்நூலின் பொருளையாய்ந்து-செப்பினா னுரோமருஷியைந்நூற்றென்று;கூறமேவநந்திசொன்ன முந்நூற்றென்றுகுருமுறைக்கு மிகத்தெளிவாங் கொடுக்கொணாதால், ஏறுகின்றகொங்கணவனெண்ணூற்றுக்கு-ளியம்பினான்மணிமுறைகளெடுத்துச்சொன்னான், பேறுபெற வேண்டுமென்றாற் பிண்ணாக் கன்றன்--பிள்ளைசொன்ன வெண்ணூறும்பேணிப்பாரே. (௨௪)

பார்க்கின்ற மூலமொண்ணா யிரத்திற்-பாடினாற் கற்பவிதியிரண்டாஞான, மார்க்கமதைச்சட்டைமுனி யோகதீட்சை, மறப்பில்லையென்றுசொல்லிக் கிழித்துப்போட்டான், ஏற்கவேபூசைவிதிமார்க்கமெல்லா-மெடுத்துரைத்தான் போகனுமேழா யிரத்தில், தோற்றியந்தவகை யெல்லாமிந்த நூல்போற்-சொல்லாது பிரமகற்பத்தொகுப்பைக்கேளே. (௨௫)

### பிரமவுப்பின்பெயர்.

தொகுத்தபடி சொல்லுகிறேன் காரசாரந்-தோன்றாத பாடாணமுபரசங்கள்,வகுத்தநவலோகங்க ணட்சத்திரங்கண்-மலைப்பூமிமூலிகைகள் கருமானங்கள், மிகுத்தசிலவுதகங்க ளெதற்கானு முமெய்ஞ்ஞானபிரமகற்பம் வேண்டும்வேண்டும்;பகுத்தறியபிரமகற்பவுப்பின்மார்க்கம்-பரிபாடைபேர்வகுத்துப்பாடுவேனே ()

பாடுவேன்பிரமவுப்பின் பேர்யாதெனறாற்-பாங்கான முதற்பேர்தான் வழலையென்பார், தேடியேசொல்லுகிறே னிரண்டாநாமந்-தெளிவானவண்டபிண்டஞ் செப்பலாகும், யேட்டணையாமுப்புக்குமூன்றுநாம-மிடைகலைபிங்கலை சுழிமுனையென்றாகும், வாடவேவேண்டாங்காணைந்துநாம-மனமொத்துப் புலத்தியனே மகிழ்ந்துகேளே. (௨௭)

மகிழ்வாகமதிபரிதி யெரிவில்லம்பு- வாகானதசநாமம் வகுக்கக்கேளாய், இசுறிலாயந்தனித்தியம மிரண்யகர்ப - மிடிவாய்வுகௌரியரிதாரமேகம், புகழ்கோசம்பீசமிவை யீரைந்தென்பார் புலத்தியனேசோடசமா நாமஞ்சொல்வேன், திகழ்வயிரமுரிகுன்னங் கடுக்காய்நஞ்சு-சிலையுவர்மண்டிரிகுணசல் சலசநஞ்சே. ()

நஞ்சானபாடாண மமுரிவித்து-நாதமுவர் வெள்ளைக் கல்
பூமிநாதம், துஞ்சாதசோடசமா நாமமாச்சு, தொகையிருபத்த
ஞ்சுக்கு விவரங்களாய், வெண்சாரைகருநெல்லி லவணப்பூநீர்-
வெடியுப்புநவமூலி மிதுனமேடம், அஞ்ச தவடுமுடியு நடுநீரு
ப்பா-மமாவாசைபிரதமையு மைம்பத்தொன்றே. (௨௯)

ஒன்றானவிடமிவண்ணான், கிரகங்கொள்ளி - யுயர்குயவ னரக்கி
கணபதிபூனுப்பு, நன்றானவிடக்கம்பியிருபத்தைஞ்சு- நல்லபஞ்
சீகரணமென்றநாமமாச்சு,குன்றா நாமமுப்பத்தாறுஞ்சொல்ல
க்-கூற்றன்மணற்பொடிமடையன் குடிபோம்விடு, வென்றானபி
டர்லவணஞ்சாரிபுஷ்டி-வெடியோசையனுமிசதிர்வெளிசுயம்பே

சுயம்பிலிங்கமெழுபிறப்பி விஷ்ணுவைவர்-சுடர்படிகமாசி
மலம் பண்ணைச்சூடன், செயம்புகழ்நீரனங்கமலம் பச்சைகாமி-
சிங்கியொடுபுயல்பரம நிலத்திற்பூடு,நயம்பெறுகண் மணிமவுன
ஞ்சுட்டல்பொட்டல் - நாயகமுமுப்பத்தாறு நாமங்கள், வியன்
பெறுசொல்பாடைதொண்ணூற்றின்பேரை-விரித்தெடுத்துப்
புலத்தியனேயினிச்சொல்வேனே. (௩௧)

௯௬-மருந்தின்பெயர்.

சொல்லவேதிருமேனி கன்மமந்திரஞ்-சோதிவிருட்சம்பட
லந்தூலஞ்சூக்மம், வெல்லுமேகாரீயங் கண்மேலுப்பு-மின்னொ
ளிவெண்கடர்கொச்சி துருசுசொக்கான், கல்லுமேவாசிபரி சுத்த
ஞ்சர்ப்பங்-கண்ணாடிபாலைநிலங் கரந்தமுத்தான் நல்லவியன் கரு
ம்பூனைகடலிற்பாசி-நந்திபுத்தான்சொரிகரடு நண்டோடாமே()

ஆகுமேகுருபரம வேமஞ்சூல-மவுரியிந்திர கோபமக்கினி
யின்கட்டி,வாகுபெறுமீனமளர்புனுகுகாவி-மலைருது வெண்கார
மபநாகம்வள்ளி, தோகைகொக்கோடுதலைப் பிள்ளைகன்னி- துத்தி
வெள்ளையாவனாசோமநாதம், சாகுஞ்சன்யாசிமண்டை தொட்
டிபூரஞ்-சமாதிநிலவுப்பொடிரஞ் சங்கமாமே. (௩௩

சங்குகண்டங்கத்தரிபொன் மத்தவித்து-சரபிசமகரமொடு
சாளக்கிராமம், வங்குசிங்குபுரியட்டம் பஞ்சமித்திர - மதியிரவி
சோடசமாமதனப்பூடு, குங்குமங்கோ ரோசினைகோ மயக்குருத்
துக்-கொன்றைகொடி ரசம்பூர்ணமிராசவர்க்கம், அங்கமுள்ளதா
துகத்தமுருளைதேர்க்கா-லங்கிளிச்சுன்னமுட்டையானைக்கல்லே

கல்லான யேகசவர்க்காரம்வியாக்கிரங்-கருவி.தொகையான
தொண்ணூற்றாறுமாச்சு,சொல்லான நூற்றிருபத்தைஞ்சின்பே
ரைச்சொல்லுகிறேன்புலத்தியவத்தொகுப்பைக்கேளு,வில்லோ
சைபுளக்கருவஞ் சனக்குடக்கு-விஞ்சைபகலவன் விளக்குவேதை

கஞ்சன், புல்லானவாமணக்குக் கானல்வேனல்-புகைபருக்காலவி
ருள் போகுதாளே. (௫௫)

## ௱௨௫ - சரக்குகளின் பெயர்.

நாளானவிந்துப்புக் கழற்கொடிக்காய் - நார்த்தைவிடமுட்
டிசிறுநாகப்பூச்சி, நாளான நரகல்கட்டம் புறவினெச்சம்-நாட்டு
சர்க்கரைவேகாத் தலைக்கல்கஞ்சம், கோளானகஸ்தூரி யஞ்சமுத்
துக்-கோளகபாடாண நாயுருவிகுப்பம், நீளானமுகிபாடாணம்
மேர்செட்டி- நிர்வாணமாக்கிராணஞ் சலநீருப்பே (௫௬)

உப்பானவெங்காயம் பசுமைபச்சை -யுடனுயிர்தப்பனந்
தாது கருவோடுழி,செப்பானபந்தக்கு நாபிபிராணன்-சித்திரை
பங்குனிசில்சரி காதுவட்டை, மெய்ப்பானகிரியுதயமத்தமேரு-
மேவுவிசை துருமபுகஞ் சல்மித்ருசத்ரு,துப்பானபவளமச்ளேசி
லைதுரட்டிசூரியனை பாடாணந் துய்யதாமே. (௫௭)

துய்யசத்திசிவஞ்சினக் காரஞ்சுட்ரஞ்-சுந்தரி தாண்டவநீல
ன்சோதனைக்கல், ஐயமின் மினிமதனகாமரூபி-யடலையணிமால
கிரிதூற்றலன்னஞ், செய்யபுதுநிலப்பருதி பலமத்தாமன்- கொ
டியுமருகுடவியகந் தேய்வுகட்கம் - குய்யமரவிபீசமணிபூரப்வ
ட்டங்-கோடைகுளியானைரசக் குளிகுண்டாமே. (௫௮)

குண்டானகாரமுடி மலங்கறுப்புக் - குதிரைகேந்தி பூரோகங்
கோவனூர்மண், உண்டானநிமிளைபொன்னி யிணங்கனூத்தை -பு
யர்பிரமனுயிரவன்பா லுண்ணைப்பிள்ளை, பண்டானசவுக்கி ல
ம்பாழ்நத்தம்- பஞ்சபட்சி யிரங்குவத்துப்பாறையுப்பு, வெண்
டானம் போன்றகல்லுப்புக்கட்டி - வீரம்பிருஞ்சு விபூநீர் விளம்
பினுமே. (௫௯)

விளம்பினவோர் நூற்றிருபத் தைஞ்சுமாச்சு - வெவ்வேறே
பிரித்தெடுத்து வெளியாய்ச்சொன்னேன்-தளராதே பிரமகர்பசு
ன்னத்தோடே-தாழ்வில்லாமுந் நூற்றே டிருபதாகும், இளம்பி
றை வந்துதித்துவளர்ந் திலகுமாபோ- லிந்தவகைப் பொருள்க
ளெல்லா மொன்றுக்காகும், பழங்கனிந்தரசம்போல வித்தநூலை
ப்-பாடினேன் கருவறிந்து பார்த்திடீரே. (௬௰)

பார்த்தறிந்திந்தவகைப் பெயரையெல்லாம்-பாடினூர் நூல்
களிலே பாடைமார்க்கம், சேர்த்தறிந்து பாராம லுல்சவாதி-செ
ப்பினவோர்சரக்கொவ்வொன்றைத்தீயிலிட்டு, நீற்றினதிற்கிரியையில்லை
யென்றேயேங்கி - நினைவுகெட்டுப்புத்திகெட்டு நிசமுங்கெட்டுச்,
சூத்திரமுங்காணமற் குருவில்லாமற்- றுயர்க்கடலில்வீழ்ந்துசு
ழன்றிட்டாரோ. (௬௧)

இவர்களுக்கு வாதமுடியாதெனல்.

சுழன்றலையும்பாவிகட்கு நூலுமுண்டோ- துன்மார்க்கசீடருக்குக்குருவு முண்டோ, உளங்கனியாச் சண்டாளர்க் கிரக்கமுண்டோ-வுப்பைவிட்டபேர்களுக்குப் பொன்னுமுண்டோ, களங்கமன முடையோர்க்கு ஞானமுண்டோ - கன்னிமயல் கொண்டோருக்கி யோகமுண்டோ,தளர்ந்தோர்க்குச் சுசயோக விருப்பமுண்டோ-சவர்க்காரநிலையறியார் தாங்கெட்டாரே. (சஉ)

கெட்டதென்னெனிலுலகில் வாதியெல்லாங் - கிருபையில்லாக்குருக்கள்சொன்ன கேள்விகேட்டுத், திட்டமில்லாமங்கையர்கள் தூரமான-தீட்சமேபிரமகற்ப செயநீரொன்று, வட்டகையிற் முன்வாங்கியதிலேபூர,மாட்டுவாரந்தவுப்பு வழலையென்பார்,சுட்பிணத்தையெடுப்பார்தலைநாண்மைஞ்சன்-றுஞ்சு சவர்க்காரமென்றுஞ் சோதிப்பாரே (சங)

சோதிக்கமையெடுப்பார் தயிலஞ்செய்வார்- துடியானதாம்பிரத்தை யுருக்கிச்சாய்ப்பார், பேதித்துக் செம்புசற்றே பசுமையானுற்- புடத்தில்வைத்துக்காணும ஆயிர்த்துச் சோர்வார், வாதிக்குங்கைபாகந் தப்பிற்றென்பார்-வகையெனக்குத்தெரியுமிங்கேவாரு மென்பார், ஊதிக்கண் போனதல்லாற் காரங்காணு-ருப்பிருந்தவிடமறியா ருலுத்தர்தாமே. (சச)

தானென்றபிரமவுப்பு வெளியுமாச்சு-சத்தமிட்ட வங்குசிங்குதலைகீழாச்சு, ஊனென்றபிண்டத்திற் கல்லுப்பாச்சு, துப்பிருந்தபாண்டமன்றே மண்ணுமாச்சு - ஏனென்றரவியாலே யுருவுமாச்சு- திந்தென்றமதியாலே குருவுமாச்சு, கானென்றமாரி கடந்தமுதமாச்சு-சாயசித்தி வாதசித்திகாணலாச்சே. (சரு)

காணவேசுத்தகெங்கை தீட்சைமார்க்கங்-கபடமதாப் பாடிவைத்தார் சித்தரெல்லாம், பூணவேசெந்நீரும் பனிநீராலே-பொய்யாதுவழலைவிந்து பொன்னுமாகும் - தானுவன்றே சடைமீதிற்றரித்தாரந்தச்-சந்திரனைக்கையாலே தடுப்பாருண்டோ,தோணவேவிந்துக்குத் தீட்சைநீரிற்-சொல்பாடை தனைப்பிரித்துச் சொல்வேன்கேளே. (சசா)

தீட்சைநீரின்பெயர்.

சொன்னவொரு சாராயத்தீநீர்கள்ளு- சுரோணித மூலப்புளிநீர்சோமன்செந்தேன்-கன்னிருதுவமுரிமூலைப்பாற்பசாருகுங்கல்லருக்கன் பால்செயநீர்கவந்தக்காக்கை-அன்னமுறுபிரவாகஞ்சுத்தகெங்கை - யாற்றுவெள்ளங்குதம்பையொடு கிளிஞ்சல்வத்து-

வன்னியினிற்புகைசருகு வேர்வைதூமை-மதிபோகாப் புனலமு
தமதுவென்பாரே. (சஎ)

மதுவாலைபுவனைதிரி புணாமேனிப்பால்- வளர்கமுதை குரு
திவேசரிநீர்தத்தம்,சதுர்பெருகு சிறுநீர்பூச் சாரமூசி- சத்திநவா
ச்சாரம்வெண் கருநீர்தண்ணீர், மதியிலுறுபிரணவநீர் பனிநீர்நா
தம்-பாலையிளங்குமரிதிரா வகங்காரசிப்பி, உதகபடிகற்பநீர்தாளி
ச்சாறு - மூன்றுளிர்கும் பிடுகல்கங்கை யுப்புநீரே. (சஅ)

உப்புமதமறுவகைநீர் தயிலஞ்சேரரி-யுகாரவெழுத் தகாரவெ
ழுத்தோகாரம்வண்,டப்புபஞ்சதீட்சைசதசமகண்டசுன்ன- மைவி
ரலிகாந்தமல ரொட்டிச்சாறு,செப்புசரஸ்வதிதீர்த்தம்யோகதீட்
சை-சிவதீட்சைசோடசம் ரீங்காரதூபம், இப்புவியிற் சம்பளஞ்
சையோகநாலெட் டென்பர் பாடைத் தொகை யெண்பத்தி
ரூன்கே. (சகூ)

எண்பதிரூற்றீட்சைவிதி முடிவில்லாம-லிசைத்தாரே சூத்தி
ரத்துக் கிணக்கமாக, முன்பினறியாமலிது வதுவோவென்று -மூ
டர்கடநினைவுமற்று முட்டிப்போட்டு, வம்புசொல்லி வாய்குழறி
த்தர்க்கம்பேசி- மயிர்பிடித்துத்தெருவில்வரும்வாதப் பேய்கள்,
கும்புகண்டாலவர்களிடஞ் செல்லவேண்டாங்-குருமுறைக்கென்
னூல்தேடிக்கூர்ந்துபாரே. (ருய)

கூர்ந்துபார்முப்பதிலேலைகபாகங்கள்-குணமானவைம்பதி
லே குருவின்பாகம், நேர்ந்துபாரொண்பதிலே வழலைமார்க்க-நிச
மான நானூற்றிலிடைநேர்பாகம், சார்ந்துபார் மதிவெண்பாத்தீ
ட்சைபாகஞ்-சவுமியமாமாயிரத்தி லநேகபாகம்,தேர்ந்துபாரிந்
நூலிற்பாடையாகஞ்-செப்பினேனிந்தநூல் சிவனொப்பே ()

சுத்தகங்கை.

நூலிலேசுத்தகங்கை நீளாக்கேளா-யுரோமருஷியைந் நூற்
றினுணுக்கங்காணும், பாலெனவே சுத்தகங்கை தன்னைப்பெற்ற-
பாவைக்கு முகநாலு காருனேமு, மேலெல்லாம் பஞ்சவன்னங்
கைதானெட்டு-விரல்பதினு ரொருசெவ்வாய் கலைதானொன்று, சூ
லெனவேபத்துநாள் சென்றபின்பு-சுத்தகங்கை யென்றொருபெ
ண்பெற்றிட்டாளே. (ருஉ

பெற்றிட்டபிள்ளைபிதா சந்திரனுச்சு-பிறந்தவுடன் மறுநா
டா ளிறந்துபோச்சு, உற்றவுதயாதியினிற் பிறந்தபிள்ளை-யுதவும
ல்லாற்செத்தபிள்ளைக் குயிர்தானுண்டோ, இத்தனையும் பெற்றெ
டுத்ததாயின்கண்ணே-யெண்பத்துநாள்குயிர்க்கு மிசைந்தயோ

ணி,சித்திபெறச்சிவசத்தி யிரண்டுங்கூடிற்-சிவசிவா சகலசித்துஞ்
சிக்குந்தானே. (௫௩

சிக்குகின்றவாயின்ற ஞதந்தானே-சிவகங்கையாகாசத் துறு
தண்ணீராம், முக்கியமாய் முதற்பிறப்புச் சமுத்திரத்தின்-மூத்த
வளுக்கிளையவளாமேமோடிகாரி, சருக்கரைபோற்கனிவாச்சிபச்சை
மேனிச்-சத்திரனைக்கண்டவுடன் றுனேசேர்ந்தாள், கொக்கிறகு
போலானுண் மறுசென்மத்திற்-கோதைக்குக்குடி யிருப்புக்கொ
ண்டாளே. (௫௪)

கொண்டலிலேதானிருந்து சிலநாட்சென்று-கொடுமையுள்
ளசென்மமதாய்ப் பிறந்தாண்மண்ணில், கண்டவருங்கேட்டவரு
ஞ்சிரிக்கலாச்சு-கன்னிகுடியிருந்தவிடம் பாழாமென்று, வண்ட
ர்களெல்லாம்விலகியொதுங்கிப்போனார்-மதிசிறந்த பெரியோர்
கள்வணங்கிநின்றார், தொண்டர்களைக்கிருபைவைத்துப் பிழைக்க
ச்செய்து-துகளில்லாப்பிரணவமே சுயம்புநீரே. (௫௫)

நீரானகல்லுப்பு நாதச்சுன்ன-நீற்றெடுத்தாற்பிறகுதிசமாகு
ங்கங்கை,ஊருகின்ற சலந்தனிலே சிவமுஞ்சேர்ந்தா-லுத்தமனே
சிவவுப்பு குருவுமாச்சு, மேருவிலேயிருந்தசித்தர் சொன்னமார்
க்கம்-வெளியிட்டுச் சொல்லிவிட்டேன் விள்ளவேண்டாம், பேர்
பெறவேவேண்டுமென்றார் சூத்திரத்தின்-பிரமாணக்கருவையினி
ப்பேசுவேனே. (௫௬)

மோக்ஷமடைய.

பேசவேபிரமாண மறிந்தோன்சித்தன்-பிரமவுப்பைக் கண்
டவனே குணசிரேட்டன், வாசிதனையோடாமன் மறிந்தோன்சித்
தன்-மாயைதனைவிட்டவனே மவுனமுத்தன், பூசைதனையறிந்த
னேகிரியை பெற்றோன்-பூவுலகத்தோடிருந்தோன் சரியைமார்க்
கன்ஊசரத்திநீர்பிரித்தோன் தீட்சைபெற்றோ-னேகோகோஞா
னமெல்லா முலகுதானே. (௫௭)

உலகுமுதற் சரியையோ வருத்தாபத்தி-யுற்றுநின்ற கிரியை
யைதீகமாகும்,பெலமானயோகம் வாதம்மிரண்டும்- பேசுவாரு
வமானப் பிரமாணத்தால், நலமானஞானமதே யதார்த்தமாகு-
நான்குமிந்தப்பிரமகற்பத்தாலேயல்லால், பலபலயோசனைசெ
ய் துமயங்கவேண்டாம்-பரமசித்தர்மறைவாகப்பாடுநூலே (௫௮

நூலதனிற் பெரியோர்சொல் கருத்தாற்பத்தி - நோக்கமில்
லாதிருந்தக்காற்சரியையாகும்,மால்செய்யுமரந்தனிலேபேயுண்
டென்று- மனத்துதித்தாலைதீக கிரியையாகும், மேலுவமைமனா
பசுப்போ லென்றல்யோகம்-விசாரணையாற் பிறியும் ரசவாதவே
லை காலகரு வெனக்காண்டல்பிரத்தியட்சங்-கதிதருமெய்ஞ்ஞான
மெனக் காணலாமே. (௫௯)

## யோகம்.

ஆகு மேபுகையதனைக்கண்டுமெய்ய-வக்கினியுண்டென் பது யனுமானந்தான், போகுமிந்தப்பிரமாணத் தனுபவத்தை தப்-புகலுகிறேன்புலத்தியனே புத்தியாய்க்கேள், சோகமில்லா வக்கினியேநகாரரூபந்-தூமமேயனுமான மாகும்பிண்ட, தேகமேபுகையாலுற் புகையையீன்ற-தீக்காட்ட மங்கென்றே தெரிந்துகொள்ளே. (௬௰)

தெரிந்துகொள்ளுந் தூமத்தைத்கண்டேயங்குத்-தீயிருக்குமென்பதைநிச் சயித்தாற்போலும், அழிந்துவிடும் பிண்டமதேவழலையெண்ணி-லப்புகைதானெருப்பாகி லதுவுமெய்யே, எழுந்தபுகை யாகுமிந்தக்காயவுப்பே-யெரிதரும்புமக்கினியுமெங்கென்றேபார்,குளிர்ந்தபுகையக்கினியு மொன்றேயொன்று-கூறிஞரனுமானக்குறிப்புத்தானே. (௬௧

குறிப்பானயோகத்துக் குவமானத்தைத்-கூறினேன் புலத்தியனேகூர்ந்துபாராய், வெறிப்பானவஸ்துவென்றேவெறுநீருக்குமெய்ஞ்ஞானமதியமுத விந்துவுக்குஞ், செறிப்பாக வுவமானமொன்றுக்கொன்று-செப்பினர் சாராயந்தனைக்கொள்ளென்றே, மறிப்பானபுத்தியினுற் புகைநீருண்டு, மாளாமன்மதியமுதம் வாக்காலுண்ணே. (௬௨

## வாதம்.

உண்ணவேமவுனரச வாதயோக.முத்தமனேவானிரச வாததாது, விண்ணுறையும்யோகரச வாதத்திற்கு-விந்துநாதப் பொருளை விளம்பக்கேளு, தண்ணிறையுந்தாதுரச வாதத்திற்குச்-சதுரானலவணமதேவிந்துநாதம், பண்ணரியவிரண்டிற்குப்பேரொன்றாகும்-பாடையினலுவமானம்பற்றிப்பாரே. (௬௩)

பாரப்பாவிரண்டிற்குமொருபேரிட்டுப் - பாடினருவமானப்பாடையாலே, வாரப்பாநாதவிந்து வழலைக்கும்பேர்-மவுனமென்றசிவயோக வாழ்க்கைக்கும்பேர்; ஆரப்பாவிதையெடுத்ததிலேசொல்வா-ரதையெடுத்திதிற்புகட்டி யதுவாமென்பார், கூரப்பாநாதவிந்து முடித்தபேர்க்குக்- கூச்சமற்ற ஞானமென்னும்பொருடான்வாய்க்கும், சாரப்பா லவணவிந்து பூமிநாதந்-தமையறிந்துமுடித்தவர்க்குத் தங்கமாமே. (௬௪)

தங்கமதையுண்டாக்கும் விந்துநாதஞ்-சாரமென்றுங் காரமென்றுந் தருமேபூமி, வங்கென்றுஞ்சிங்கென்றும்பூமிநாத- மதியிரவிசுழுமுனையின்மாட்டக்காணும், திங்களென்றவுடல் சித்தேயதற்கேபூமி-திருக்கொடுக்கமாட்டாமற்செகத்துள்ளோர்கள், தங்கள்பஞ்சேந்திரியம்விந்துநாதம்சவர்க்காரமென்றெண்ணித்தவறுண்டாரோ. (௬௫)

### கிரியை.

தவறுமல்யோகமொடு வாதத்திற்குஞ் -சமாதானமான பிரமாணஞ்சொன்னேன், பவமானகிரியையெனு மைதீகத்தின்-பாடைதனைப் பிரித்துரைக்கப் பண்பாய்க்கேளு, கவரானமரந்தனிலேபேயுண்டென்று-கைகாட்டப்பேயின்றன் கண்ணிற்கண்டாற், சிவமானமந்திரசித்தி யுண்டாமென்று-சிந்திப்பதேகிரியை செழிக்குந்தானே. (௬௬)

### சரியை-ஞானம்

தானென்றசரியைக்குக்காமியார்த்தந்-தருமத்திற் குறுதிமெய்ஞ்ஞானமாமென், றீனமறுபாக்கியவான் றுபத்ரயோ-னிருவரையுஞ்சாட்சியெனவெடுத்துக்காட்டில், ஊனென்றசரியையிதுபத்தியாச்சு-துத்தமனே ஞானபிர திட்டைகேளு. நானென்ற விருத்திதனிலுற்றுப்பார்த்து-நல்லகட்டையென்றறிதன்ஞானமாமே(

ஞானமென்றபிரமாணமூலங்கண்டா-னல்மான நூற்குறிப்புநன்றாய்த்தோற்றும், வானமென்றயோகசித்தி காயசித்தி-வாதசித்துங்கைவசமாம் வகாரத்தாலே, கியானமென்றேனூறென்றேனெங்கேயென்றேன்-காயசித்திபெற்றநிசக் கருத்துளோர்க்குப்பானமென்ற ஞானசித்தி முத்தியாகும்-பஞ்சசுன்னக் கருவையினிப் பகருவேனே. (௬௮)

### பஞ்சசுன்ன விவரம்.

பகருவேன்குக்குடத்தின் சுன்னமொன்று - பரிவானகற்கிளிஞ்சிற்சுன்னமொன்று, நிகரில்லா வெள்ளைக்கற்சுன்ன மொன்று-நீரானகடனுரையின் சுன்னமொன்று,சுகமானவலம்புரியின்சுன்னமொன்று- தூகளிலாவஞ்சுவகைச் சுன்னத்தாலே, தகைபெறுசீர் நாதமதைச் சுண்ணம்பாக்கிச் - சாகரநாதஞ் சேர்க்கத் தண்ணீராமே. (௬௯)

தண்ணீராஞ்சிவகங்கை சுத்தகங்கை-தாயான பிராணனுமே சந்திரபானம், கண்ணீராஞ்சத்தியெனு நாதத்துள்ளே- கலந்தபரப்பிரமவிந்து கலந்ததானால், ஒளீறானசுக்கிலமுங் குருவுமாச்சு- ஓகோகோதங்கரச முதித்ததம்ம, மண்ணோடுபுலமுதலாவேமமாச்சு-மாறுமலிந்திரன்போல் வாழ்வுண்டாச்சே. (௭௰)

### சத்திதீட்சை விவரம்.

வாழ்வானசத்திக்குத் தீட்சைமூல-வகையறியச்சொல்லாது நூல்கடோறும், தாழ்வில்லாசத்தியுஞ்சிற் சத்திக்குள்ளே - தான்கலந்துமுன்சென்மந் தானேசென்றாள்,கோளேதுமில்லாத நாதசுன்னங்-கூறுமந்தச்சுன்ன நவ கட்லின்மூழ்கித், தாளானபிரணவநீர்தானுமாச்சு-சவர்க்காரசெயநீரைச்சாற்றினேனே. (௭௧)

சாற்றுகின்றசிற்சத்திபஞ்சமித்திரஞ்-சத்திக்குப்பின்புதித்த போகசித்தி,வேற்றுருவுபோலிருந்தா ளுயிருமாகுண் - மேதினி யோர்க்குபகாரி பஞ்சமித்திரம்,தோற்றுகின்றபஞ்சமித்திரந்தீட் சைவிட்டாற்-சுத்தகங்கையாகாது நாதசத்தி, காற்றடிக்குங் காந்த மலர்கடலுஞ்சேர்ந்தாற்-கனகாகுவ தசித்தி கைக்குள் ளாச்சே.

ஆச்சப்பாசிவத்திற்குத் தீட்சைமார்க்க-மைந்நூற்றிற் சொல்லுகிறேன் விரிவதாக, மூச்சப்பா நாதமெனு முன்னிற்பின்னின் மூதண்டபிரணவமாஞ் செயநீர்க்குள்ளே,தோச்சப்பாவபிடேக ஞ்செய்யச்செய்யத்-தோடமெலாம்விலகியேசுயம்புமாச்சு, நீச் சப்பாகடல்கடந்தேயமுதமாச்சு - நிசமாச்சுசிவதீட்சை நினைவா ய்ப்பாரே. (௭௩)

நினைவாகப்புருடனுக்குப் பெண்மேல்மோக - நெரிசுரிபூங் குழன்மகட்காடவன்மேன்மோகம்,கனமருவுமிருவருமே கலந்த போது-கமலமலர்வதனமோடுதிக்கும்பிள்ளை, இனிதான பிள்ளை யினுலெல்லாமுண்டா-மிந்தவிதமாயிருக்குந்தீட்சைமார்க்கம், வ னவாசமாய்த்திரியும் வேடத்தோரே-மன்னவர்க்கு மங்கையர்க் கும்வயதுகேளே. (௭௪)

மங்கையெனுமுகாரசத்தி நாதத்தாய்க்கு-வயதுபத்துச்சந் திரன்றன்மகளுமானாள், திங்கண்முகம்போலிருப்பாள் சிறியகன் னி-திரண்டபின்பு குடிலைவிட்டுத் தெருவில்வந்தாள், கங்கணத்தி யென்றொருவன் காப்புமிட்டான்-காலெடுத்தே காலி கந்தன்னைக் கிட்டான், பங்கமில்லாவயதுபத்துச் சென்றகன்னி- பசிதவிர்ந்த வாதிமுகம் பார்த்திட்டாளே. (௭௫)

இட்டவொருமன்னவனே யகாரவிந்தே-யென்சொல்வேன் பதினாறுவயதுமாச்சு, சுட்டகதிரோனிடத்திற்பிறந்தபாலன்-மூ கையெனும்பெண்ணடுத்துவாழ்த்ததீன், இட்டவிதியோவவனும் வெளியேமும-லெண்ணிரண்டு முழத்துள்ளா யிருந்துபோனான், பொட்டலென்பாரிருவர்களு மிருந்தவீடு-புலத்தியனே சூத்திர த்தைப்பொருந்திப்பாரே. (௭௬)

பொருந்துகின்றகாலமெனு மீனமேடம்- பூவையரும் வள ர்பிறையிற்பூரிப்பாளுள்,திருந்துகின்றபுருடனுக்கு மீனங்கேழே- தேய்பிறையாம்பதினாறிற் செனிக்குங்காலம்,அருந்திருந்தவிரண் டுக்குங் குணங்களுண்டா-லடையாள முண்டொரவை யடர்கமு ண்டு, வருந்திவிளைகின்ற வொருகாலமுண்டு வனமுண்டுநகருண்டு மகிழ்ந்துகேளே. (௭௭)

கேளையாவளர்பிறையிற் பிரதமையொன்று-கொடியானது விகைதிருத்திகைமற்றொன்று,நாளையாசதுர்த்திபஞ்சமி தானெ

ன்றுநலமானசஷ்டிசப்தமிதானென்று,வாளையா வஷ்டமியுநவமி யொன்றுவண்டசமியிவைபத்துமகத்தாந்தீட்சை ஆளப்பாதசமி யிலேமுடிந்தபிண்ட-மதுதப்பிற் சுத்தகங்கையாகாவாறே. (எஅ)

ஆகாதுதேய் பிறையிற் பிரதமைதொட்டுற்ற- வமாவாசை பதினைந்துக்கடுத்தநாளில், சாகாதகாலுக்குட் பிரமகற்பந் தாண் டினூற்சிவநீங்கிற் றவறுண்டேபோம்,வேகாததலையன்றோவுப்புப் புப்பு-மேலாகவளர்கலையேயப்பப்பப்பும்போகாத புலனன்றோ சுத்தகங்கை-பூரணமுங்காரணமும் போதிப்பேனே. (எகூ)

போதித்குமுப்பூவேமுப்பாழாச்சு-புரியட்டபூரணமு மது வேயாச்சு, நாதிக்குமிடந்தனிலே யெழுந்தவுப்பு - நன்றானகால டியிற்சமாதியாச்சு, சாதிக்குநலமொன்றிற்சத்தியுப்புச்-சந்திரனு ஞ்சூரியனுந் தாங்கிப்பாராய், வாதிக்கு மானிடரோவறிவர் நல்ல மகாமவுனயோகியர்க்கே வாய்க்குமன்றே. (அ௦)

வாய்க்கவேசிவனுக்குப்பாலைமுல்லை-வளர்குறிஞ்சியிவைமூ ன்றும் வண்மையாகும், சேர்க்கவேசத்திக்கு மருதம்செய்தல்-செ ழிப்பானதலமென்று செப்பினாலும், எற்கவேபாலை யென்றுன் முதலாம்பூமி யிரண்டிற்குங்குறிஞ்சிமுல்லை யிறப்பநன்று,பார்க் கவேவனதீரம் பொடிபண்பொட்டல்-பங்குனியுஞ் சித்திரையும் பதிவுதானே. (அக)

பதிவானகரிசனிலமடுக்கொண்ணாது-பருங்கடற்றண்ணீரை யடுத்திருக்கலாகா,சதுரானமலையருவித்தண்ணீராகா - சமரசமா யிருக்கின்ற தலமேவேண்டும்,கதிரான பாலைநிலம் வண்டல்பொ ட்டல்-கன்னிவனஞ்சிறுகாசா கவந்தபூமி, விதிகாணுஞ் சுக்கான் பாரிவைகள்கண்டால்-விமலசதாசிவஞ்சத்திமேவும்பாரே. (அஉ)

மேவுமேகன்னிதுலா மீனமூன்றில்-வேளைதிதி யுச்சமொடு சமபாவத்தில், காலைதிரிபுரைபுவனை வாலைமூவர்க்-கண்டுறுதி காம சையோகமூட்டிப், பூவானரவிமுத்தை யிந்துமுத்தை - பூரகத்து மனதூன்றிப்பூசைமேவித்,தேவிவிந்துசிவவிந்தவ் விரண்டுங்கண் டுசித்தாந்தஞானமுதற்றியானஞ்செய்யே. (அ௩)

செய்யவேமனோவிருத்தி யைவித்தன்னைச் செந்தீயிலிட்டு- வறுத்திட்டார் பின்னும், வையகத்திதன்முளையாது ஞானமுத்தி மாதவத்தோர்க்கெய்தும்ரசவாதவேலை, உய்யவென்று நற்சீடர்த னக்குச்சொன்னே-னுத்தமனே நாதவிந்தி னுண்மை பார்த்தே, ஐயமில்லாவுள்ளத்தோ டிரண்டாங்காண்ட-மருளுகின்றமுறைப் படியேதெரிந்துசெய்யே. (அச)

தெரிந்துகுருச்செய்கின்ற குருவின்பாகந்-தினையளவுந்தப்
பாது கைபாகங்கள், தெரிந்துரைத்தபடியேநீ குருவைச்செய்து
சிவயோக வாழ்க்கையிலேசித்தமாகி, விரைந்துதமக்கே தேனும்
வேண்டுமென்றால்-வேதையிட்டுச் செலவழித்து விரைந்துதள்ளி,
புரைந்துலாணவக்கருத்தை யொடுக்கிமுத்திபுகழ் - கேணியோக
த்தி லிருந்தேறுமே. (௮௫)

ஏறுதற்குநூன்முடிவந் நூலின்பாடை-யியம்புகிறேன்சித்த
மதி னியல்பையெல்லாம், ஆறுமேயானைகண்ட குருடர்போல-
வறியாதபிள்ளை மாற்றறிவானென்றும், பாறுமேபசிய மண்ணுந்
தண்ணீரொன்றும் - பகர்சஞ்சநாதத்தி ஞுதமென்றும்,காறுமேகள்
ளைவெள்ளைநீர்ப்பந்தல் - காட்டுமென்றுமின்னம்வெகுகதை
சொல்வாரே. (௮௬)

சொல்லுநெருப்பாருமயிர்ப் பாலம்போலச் - சுண்ணாம்பி
லேயிருக்குஞ் சூட்சமென்று, மில்லறமேநல்லறம தாகுமென்று
மிறைத்தாலாக்காத்தபள்ள மூண்டேயென்றும், வல்லமுத்துமா
ணிக்கநீலமென்றும் - வண்ணானுக்கேதெரியும் வகார மென்றும்,
வில்லோசையென்றும் வீட்டுக்குள்ளேயென்றும்- வித்தையுள்ள
திட்டாந்தம் விளங்குநூலே. (௮௭)

விளங்குமிந்நூல்களிலே கதையின்பாடை - விவரமெலாமு
ரைக்கவென்றாற்பெருநூலல்லால், உளங்குளிரமுதற்காண்டமொ
ருநூற்றுக்கு - ளொடுக்கமாவெடுத்துரைத்தே னுண்மையெல்லா
ம், பிளிறுகின்றயானைகண்ட குருடேதென்றாற் - பிரணவமாம்
மூத்திறுதி பேணிப்பாராய், இளங்குழந்தைமாற்றறிவா னென்ற
சொல்லி-மெண்ணூழிவயசுபத்து மிசைந்தமாதே. (௮௮)

மாதுமண்ணுந்தண்ணீரு மப்புமுப்பும்வரைகஞ்சுநாதமே
ன்றால் வாழைத்தாது, காதலனும்வெள்ளைக்கள்ளை நீர்ப்பந்த
ல்-காட்டுமென்றாற்பிரமகற்பக்கல்லின்பூமி, வேதமெனுநெருப்
பாறு மயிர்ப்பாலந்தான் - வேதையிட்டு லோகத்தில் வெள்ளிமூ
லம், சூதறியுஞ்சுண்ணாம்பிற்சூட்சமென்றாற் - சுத்தசலம் பிறப்ப
தற்குச்சுன்னமெண்ணே, (௮௯)

எண்ணவேயில்லறநல் லறமென்றக்கா - லிசைந்தபஞ்சநில
மதிலே யிசைந்தபூமி, கண்ணவே யிறைத்தவரைக் காக்கும்பள்ள
ங்-கைபாகங்காண்பதற்குக்கருதானையா, வண்ணமுத்துமாணிக்க
நீலமென்றால் - வழலையெழு பிறப்பான விண்ணினின்கூறு, சொ
ன்னவகையறிவதுவே வண்ணானென்றாற் - றுவைப்பதற்கு வெள்
ளாவிதோன்றும்பாரே. (௯௰)

தோன்றுதவிங்லோசை யென்றூற்சூதந்-தொகையானவிட்டுக்கு ஞண்டேதென்றால், காணுதபிரமகற்பக் கல்லெனறேபேர்-காட்டினர் நூல்களிலே காணுதென்றே பூணுதகதைகளின்னும்வெகுவாயுண்டு-பொருளெல்லாமுப்பினுக்குச்சுத்திக்கல்லால், வீணனசொல்லென்று நினைக்கவேண்டாம் - வெளியாகப் பாடைதனை விண்டிட்டேனே. (௧௧)

பஞ்சாட்சரம்.

விண்டுசொல்லுஞ்சத்தமுதற் பதினெண்பாடை-விளங்குகின்றவட்சரமாம் விருத்திக்கெல்லாம்,பண்டுவந் துயிரொழுத்தைப் புலத்தியாகேள்- பண்பானவகாரமென்று மிகாரமென்றும், கண்டுசொல்வேனுகாரமென்றுமெகாரமென்றுங் - கருவானவொகாரமென்று மிந்தவைந்தும், அண்டர்பிரான்சொன்னவெழுத் தைஞ்சும்வேத-மரகாரநாதத்துக்கருளிதாமே. (௧௨)

அருளானவெழுத்தைஞ்சு மில்லாவிட்டா-லப்பனே புகலாதுசத்தமொன்றும், பொருளானவட்சரமு மற்றபோது- போதித்த நால்வேதம் பொய்யாய்ப்போச்சு, தெருளான வுயிரொழுத்தொன்றில்லாவிட்டாற்-செத்தெழுத்தாற் காண்டம்விண்டு செப்பலாகா, மருளானவெழுத்தைஞ்சும் பிறப்பெங்கென்றுன்-மைந்தனே யூமையெழுத்தாகுமாறே (௧௩)

ஆறுன வூமையென்றாலானுமாச்சே - யப்பனேயறிவாச்சுமயங்கவேண்டாம், கூறுனவூமையெழுத் தொன்றினுலே-கூசாமலஞ்செழுத்தும்பிறக்கலாச்சு, மாறுனமவுனவெழுத் தறியவென்றால்-மனமழுந்திவிட்டக்கான் மவுனத்தோன்றும், தேறுனமனமன்றேபிரமவித்துச்-செப்புகிறேன்ஞானவழிதிறமாய்ப்பாரே.

பாரப்பாவழலைக்கேயிலக்கப்பாடை-பாங்கானவட்சரமாம் பாடையோடு,கூரப்பாநூற்பாடைதேசபாடை- குருமுடிக்குங் கைபாகக்குருவின்பாடை, சீரப்பாபரிபாடை யோகபாடை-சித்தரெல்லாம்பலபலவாச் செப்பும்பாடை-நேரப்பா விவையெல்லாமைந்நூற்றுக்குணிமாநிமாயாச்சொன்னதிறனிகண்டதாமே

இந்நூலிற்சொல்லியவிபரம்.

ஆகுமேமுதற்காண்டம் வழலைகங்கை-யாதியிலே பிறப்புமதின்பெயருஞ்சொன்னேன், சேகரமாவிரண்டினிலே குருமுடிக்குஞ்-செய்பாகக்கைபாகத் திறத்தைச்சொன்னேன்,பாகமதாமுன்றினிலே கற்பமூலம்-பதியானயோகமதை வகுத்துச் சொன்னேன், வாகுபெறநான்கினுக்குண்ஞானசார-மணி முடிக்கும்வயனமெலாம் வழிகண்டேனே. (௧௫)

வழியானவைத்தாங் காண்டத்தினுள்ளே-மறைத்தபொருட்
பாடையெலாம் வகைகள்காண, தெளிவிலாக் காண்டத்திற்கருக்க
ளெல்லா - நிகழ்த்தினேன் யல்பொருட்சொல் காண்டமென்றே
சுளுவாகக்கருவறியக் கடைக்காண்டத்தைச்-சோதித்தாற்றோன்று
மே தோன்றுமெல்லாம், வெளியாகுமிந்தநூலைந்தாங்காண்டம்-
வேதமென்றேசித்தர்களும் விளம்பினாரே (௯௭)

விளம்புகின்றவழலைக்கு மூலமொன்று-விசையானசுத்திக்கு
மூலமொன்று,தளும்பாதகும்பகமாமவுனமார்க்கந்-தாங்கிநின்ற
யோகத்தின்மூலமொன்று, குளம்பானகற்பத்தின் மூலமொன்று
குளிகையெனுஞ்சாரணைக்கு மூலமொன்று,வளம்பெறவேஞான
த்தின் மூலமொன்று-வகையாறு மூலத்தின் வயனங்கேளே ()

வயனமென்றவழலைதனக்குப்புமூலம் - வாகான தீட்சை
க்குக் கனலேமூலம், நயனமென்றயோகத்தில் வாசிமூல - நல்ல
வொருகற்பத்தில்ரசமேமூலம்,குயனமென்றகுளிகைக்குப்பாட்
டுமூலங்-குற்றமில்லாஞானத்தின் மனமேமூலம், தயினமென்ற
விலைக்கெல்லா மென்னூல்மூலஞ்-சாரகாரத்துறையைத் தாக்கி
ப்பாரே. (௯௯)

தாக்கிப்பாரிந்தநூலைந்தாங்காண்டந்- தமைப்பார்கிற்சமுசய
ங்கடள்ளுண்டேபோம்,நோக்கிப்பாரிந்தநூறனக்குச்சாட்சி-உ
ரோமருஷியைந்நூறு நந்திநூலும்,தேகிப்பாரிதனாலேதெளியா
துண்டோசிவசிவாகுருதேடித்திரியவேண்டாம், பாக்கியமாநூல
தனிலிரண்டாங்காண்டம்-பாடுகிறேன் முதற்காண்டம் பரமாமு
த்தே. (௱)

முதற்காண்டம்- முற்றிற்று.

## இரண்டாங்காண்டம்.

முத்தணிநகையாள்வேத முதல்வியைப்பாகம்வைத்த,சுத்த
மெய்ஞ்ஞானதீபச்சுடர்ப் பெருஞ்சோதிபாதம், நித்தமுந்தொ
ழுதும்போற்றி நீதிசொல்பாடைநூலின், புத்திசேரிரண்டாங்காண்
டப்பொருளினைப்புகலுவேனே. (௧)

புகலுமுற் காண்டந்தன்னிற் புகட்டினேன் வழலைமார்க்கம்
செகத்துயருப்பின்றீட்சை சிவத்தின்பேர்செப்பினேனால், இகத்
தினின்மூடஞான விருளினையெளிதினுக்கும், பகலவன்போலுமி
ந்தப் பாடைநூல்பயன்பெற்றோர்க்கே. (௨)

பயனறியாதமாண்பர் படிக்கிலென் விடுக்கிலென்ன,உயிரி
னையடக்கிடாதாருனாபொருடெரிந்தாலென்ன,தயையுள்ளகுண

மிலாதார் தாட்டிகராருலென்ன, சுயமதா முப்பைவிட்டுச்சுட்ட தோஷிக்கொப்பாவார். (௩)

ஒப்பிலாவிரண்டாங்காண்டத் துறையறிந்தவனேவாதி, தப்பிலாச்சிவயோகத்திற் றலைவனுமிவனேயாகும், இப்புவிதனிலேதேகசித்தியுமிவற்கேயெய்தும், அப்பணிசடையோன்சொன்ஞனறிந்திடுமறிவுளோரே. (௪)

அரியவாம்ரசவாதத்துக்காதியாமுப்பொன்றேகாண், திரிவிதவழலைச்சுன்னஞ் செய்துநீர்த்தீட்சையொன்று, குருசெய்யுமிடைபாகத்தாற் கூட்டுகைபாகமொன்றிந், நிரையினையறிந்துளோர்க்குநிட்டையுநிலைக்குமன்றே. (௫)

வேறு.

நிலைப்பதற்குச்சூத்திரங்க ளநேகமுண்டு-நீணிலத்திலிந்நூல் போற் கிடையாதப்பா, மலைக்குள்வளர்பெரியோரையடுத்துக்காத்து-மனமுருகிநின்றக்கால் வாய்க்குமிந்நூல், கலத்தமிழிற் காப்புமுதற்கடையும்பார்க்கக் - கைகாட்டுங்குருவென்னக் சாணுமிந்நூல், விலைப்படுத்தியுடல்வளர்க்குஞ் சண்டாளர்க்கு- விமோசனகாலஞ்சிறிது மில்லைமாதோ. (௬)

இல்லையென்றுகூறுமல் யார்க்குமைந்தா விந்நூலைச் சிவயோகிக்கீதனன்றே, இல்லையென்றுசொல்லாமல் யார்க்குமைந்தா-விந்நூலைச்சொற்றவருர்க்கீதனன்றே, இல்லையென்றுகழறுமல்யார்க்குமைந்தா-வெழின்ஞானமுடையோருக்கீதனன்றே; இல்லையென்றுளாயாமல் யார்க்குமைந்தா - விந்நூலைப் புண்ணியருக் கீதனன்றே. (௭)

நன்ருனபிரமகற்பக் கல்லின்மார்க்க-நாட்டினேன் பாடையினுன்முதற்காண்டத்தில், இன்றுண்டோவுலகத்தில்வாதியெல்லாமிந்தவிதங்கண்டறிவாரில்லையில்லை, அன்றேதானீசனெனக்குணாத்தவுண்மை-யப்பவிவ்விரண்டாங்காண்டத்திற்சொல்வேன், குன்றன்னவறிவுடைய புலத்தியாகேள் - குருமுறைக்கு வழலைதனைக் கூறுவேனே. (௮)

வழலை.

கூறுவேன்வழலையிலே நாலுசாதி - கூசாமன் முடித்துவைத்தார்சித்தரெல்லாம், தேறவாயந்தந்த வகையாதென்ருற்-சிறுநீராற்காச்சுகின்றவழலையொன்று, பேறுபெறச்சுண்ணம்பு மூவருங்கூட்டிப் பிசகாமற்காச்சுகின்ற வழலையொன்று, நாறுகின்றசயிந்தலவணங்கள்கூட்டி-நலமாகக்காச்சுகின்ற வழலையொன்றே, (௯)

ஒன்ருனகளியுவர்மண்வீரம்வெள்ளை-யுள்ளபடிகாச்சுகின்றவழலையொன்றே, என்ருனவென்மகனேவேம்புபுன்கி - னெண்ணெ

யிட்டுச்செய்திடுவாரிந்தநான்கும், நன்றேதுமில்லையிந்த சவர்க்காரத்து-ணட்டுக்குள்ரசவாதிசுன்னஞ்செய்து, குன்றுதசரக்குகளைப்பொதிந்துசுட்டுக் - குணமில்லாவகைகண்டு குறையாவாரே (௰)

குறைபுட்டுப்போகாம லிந்தநூலிற்-கூறுகிறேன்வழலையின்றன்குறிப்பைமைந்தா, நிறைவானரதிமதியு மங்கிமூன்று - நின்றவகலண்டத்திற் பிரமவித்தாய், மறைவானமூன்றதினு லுலகமாச்சுவாயுவங்கியப்புமன்றுமகத்தாம்விந்தே, உறுகதிர்முச்சுடரொடுத்ரிகர்த்தாவாகி-யோங்கிநின்றபிரமசித்தினுண்மைமன்னே ( )

சாதிவெடியுப்பின்பிறப்பு.

உண்மையாமக்கினியினுறுகோபத்தா- லுற்றரவிமதியிரண்டுஞ்சையோகித்து, தண்மையாம் விந்துவெனுமழையுண்டாகித்தரணிமுதலெழுதோற்றசார்புண்டாகி, வன்மையாம் முறுபஞ்சேந்திரியங்களாகி - வந்ததாற் பிரமமெனு மாயக்கூத்து, வெண்மையாம்விசும்பாலேவிடமுண்டாகி-மேகசலத்தாற்பிறந்தவெடியுப்பன்றே. (௰௨

வெடியுப்புச்சுத்தரவிபீசமாச்சு-வெருட்டினரிதைத்தானேமுடிவாமென்றே, இடியுப்போவிருந்தவிடஞ்சொல்லாமற்று-னிலிங்கனுப்பைச்சிவமென்றே யிசைந்தேசொன்னார், அடியுப்புநிலவுப்பென்றறியமாட்டா- ரடுத்ததப்பைச்சிவமென்றேயறியமாட்டார், குடியுப்புப்பாறையுப்பென் றறியமாட்டார் - கோடானகோடியுப்புக்கூறுவாரோ. (௰௩)

கூறுவார்முதல்வழலைநிலவுப்பாச்சு-குறித்தறிய வேண்டுமெனிற்பூமிநாதம், மாறுவார்காச்சுவார்வழலைசெய்வார்- மதியுப்புப்பிண்டமென்பா ராயினுதம், தேறுவாரிவர்தாமே சிவமாமென்று செப்பியுந்தாமறியாக்காற் றிறந்துசொல்வேன், பேறுபெறநிலவுப்பேபூநீறொன்று-பேரிட்டவகைபிரித்துப்பேசுவேனே. (௰௪)

நிலவுப்பு.

பேசுவேன்பூவென்ப தயனுமாச்சு-பெரிதான நீறொன்பதறைமாலாச்சு, வீசுகிறேன்மாறுனேயீசனானன்-வேதனெனும்பிரமனே சத்தியானன், ஊசாசரத்துக்கடுத்திருந்தவுப்பேயீச-னுப்புக்குமேலிருந்த மண்ணேசத்தி, தாசியர்க்குமண் ணன்றுவளையலாச்சு-சுத்தியைவிட்டகன்றவுப்புத் தானேபோச்சே. (௰௫)

போச்சப்பாவீசனுப்புத் தண்ணீராச்சு-பூத்தசுன்னஞ் சத்தியன்றே மண்ணேயாச்சு, தேச்சப்பாவிழிகுலத்திற்பிறந்தவீசனிதனுமேலசத்திக்குளடக்கமானன், வாச்சுதப்பாகாறலையாய்த்தலையேகாலாய்-மாறிநின்றபடியாலேமறைத்தார்நூலில், பேச்சப்பாநாதமென்றுமடியாமென்றும் - பிண்டவவர்சத்தியென்றும் பேசினரோ. (௬௰)

பேசாதபூவழலை பிரமகற்பம் - பின்னையொன்று மில்லைநில வுப்பேபீசன், கூசாதேமுடிதலையென் றிதற்குப்பேராங்-கொண் டன்மதியுப்பென்றுங் கூறலாகும், பூசாரமறியாக்காலீசனுப்புப்- பொருந்தாது முதல்வழலை பொய்யாப்போகும், ஆசாரக்கள்ள ருக்கப்பேச்சேவேண்டா-மாதித்தனுப்பையுணக்கறையக்கேளே.

ரவியுப்பு,

அறையக்கேள்பொட்டிலுப்பு வெடியுப்பையா-வரா கராக டைசியென்ற வழலையாகும், பறியக்கேண்மண்ணெடுத்துச்சலத் தான்மூட்டிப்-பக்குவத்திலூற்பிறக்குங்கம்பியுப்பே, யுறையச்செ ந்தீக்கண்டாற் பிடித்துவெந்தே-யொடிந்தக்காற் சிவமென்றுமு ளைப்பாரையா, முறையாக்கேளீசனுக்கு மரணமுண்டோ- மோ சமுண்டோவிணங்கன்வெகு மூர்க்கனமே. (௰அ

மூர்க்கமுள்ளரவிவிந்து மதியின்விந்து-மூன்றுபங்குமிரண் டுபங்குமாகக்கூட்டித், தீர்க்கமாமிணங்கியெனும் பெயருமாச்சு சிவசிவாவெண்ணெய்குடித்திருக்குமுப்பு, மார்க்கமாயக்கினிக்கு ரோமம்போல- மாமிசத்தின் கருவைவிட்டான் மாளா துப்புப், பார்க்கவேகாலுக்கு முடியென்றேபேர் - பரிதிவிந்து மதிவிந்தி பாவொன்றாச்சே. (௰௯)

பாறையுப்பு.

பாரப்பாநிலவுப்பு வெடியுப்புக்கு - பாடையென்ன வொ ன்றல்லாலிரண்டுமுண்டோ, நேரப்பாவடியென்று முடிதானெ ன்று-நிணைநிணையாய்ச் சொன்னதினூற் பலனேதுண்டு, கூரப்பா வடுப்பிலிட் டெரியுந்தீயிற்- கொள்ளியிலேசுடர்க் கொள்ளிகுறுக் கேயுண்டோ, சீரப்பாமுன்பின்னூச் சொல்லுநூல்க - டிரிவிதமா முப்பினதுதீர்க்கந்தானே. (௨௰)

தீர்க்கமாய்வெடியுப்பே சிவனுப்பாகுஞ் - சிலநாளிற்சித்தி யென்றுசெப்பலாகும், மார்க்கமாய்ச் சொன்னதல்லா லுப்பின் மார்க்கம் - வகையறுத்துச்சொல்லாதவகையேதென்றால், மூர்க்க முள்ளசித்தரொன்மேற் கோபஞ்செய்வார்-மூடிவைத்தே னிதனு மேலமுன்பின்னாகப், பார்க்கின்றபிள்ளையறி வுடையனூற் பதரு மனூன்முழுதும்பார்ப்பன்றானே. (௨௧)

தானானபாறையுப்பைச் சொல்லவென்றாற்- சமுத்திரத்திற் பாறையிலேதானுண்டாகும், வானானகல்லுப்பென்றிதற்குப்பே ராம்-வாரியென்றுமப்பென்று மதற்குப்பேராம், தேனான சிவக ன்னியென்றும்பேராஞ்-செப்பரியகங்கையென்று மதற்குப்பே ராம், ஊனானதிராபோகமென்றும்பேரா-முத்தியிலே பாறையி னில் வளரும்பாரே. (௨௨)

வளருகின்றவுகாரவுப்புச் சிறுநீருப்பு - வகாரவுப்புத்திரையினுப்புவத்துப்பைய, துளிரானசுத்தசலதீட்சையுப்புத்-தொழின்முடிக்குஞ்சீனவுப்புச் சத்தியுப்புத், தெளிவானகடன்மதிக்கத்திரண்டவுப்புச்- செய்யவதிமதுரவுப்புச் செந்தீயுப்புக்,களியாதகளியுப்புக் கரியினுப்புக்-கண்டுபாராதித்தன்கட்டுமுப்பே, (௨௪)

கட்டுகின்றவங்கியுப் பீசனென்றுங் - காட்டினார் முடியுப்புக்காணுரென்றும், விட்டகுழியகாரமென்று மையாவையா - மேனிவிந்துநாதமதை வினவலாமோ, பொட்டலென்ற வூசரத்துக்குள்ளேபீசன் - புதையுண்டுபோனானேசமாதியாக, ஒட்டுகின்றசிவசத்தி யிரண்டுபேரு -மோரிடத்திற்குடியிருந்தாருற்றுப்பாரே

உற்றுப்பார்சிவமிருந்தபூமிதன்னி - லொருபூண்டுமுளையாதேயுவருப்பாலே, அற்றுப்போமருதநில மயானருத்திர - னவனுடனேசத்தியடுத்திருந்ததாலே,முத்துப்போற்கொஞ்சம்விஞ்சச்சலமுண்டாச்சு முழுமோசமில்லாமற் பசுமையாச்சு, சித்திக்கும்பசந்தமண்ணுந் தண்ணீர்கண்டாற் - சிவனுப்புநிலமுவராந்தெளிந்துபாரே, (௨௫)

பாரப்பாவீசனுப்பைக் காணவென்றாற் - பனிக்காலங்குடிவிட்டுப் பார்க்கவேண்டும், ஊரப்பாவெளுக்கின்ற வண்ணானுப்பாலொருமுழமோவிருமுழமோ வுயரந்தானே, வாரப்பாபக்கமோபூமியுள்ளோ -மாலையுச்சிகாலையோமதியோவெய்யோ,ஆரப்பாவாகாசவுப்பைக்காண்பா - ரானாலுமூசரத்தை யடுத்துக்காணே. (௨௬)

அடுத்துக்காண்மாசிபங் குனியின்மட்டு -மமாவாசைமுன்னேடும்பின்னும்பாராய், தொடுத்துப்பார்நிலவுப்புக் கதிராய்ப்பூத்துத்-தோன்றுகின்றநாடனிலே மழையுமாகா, தெடுத்துப்பார்குளிர்ச்சிகொண் டெழுமப்பூவி-லில்லறத்திலீசன் விந்தைச்சையோகித்து, வடித்தவுவர்சத்திகவ ளீகரித்து - வந்ததுநன்னிலவுப்பின் மகிமைதானே, (௨௭)

மகிமையாமூசரமுமீசனுப்பை -வாங்குமுன்னே யதிகமாஞ்சையோகத்தால், பகையானசத்திக்கு மிரவிமுத்திரை - பாடிநாநாதிசெய்யப் படிகமூன்றி, யுகமுடிவுநமக்கென்ற வீசனுப்பையுட்கொள்ளமாட்டாதே யூசரந்தான், வகையானமஞ்சணின்றவன்னமெல்லாம்-வருஞ்சுத்தவெண்மைநிறம்வாங்கிப்போமே.

வாங்கிப்போமூசரத்தில்வெண்மையில்லை மஞ்சளுக்குச்சிவக்கின்றமார்க்கமில்லை, எங்குகின்றதீயிடலிச்சுறத்துப்போகு-மிந்தவகைவாதிகள்கண்டெடுக்கமாட்டார், நீங்கிப்போகாதபடி யீசன்விந்தை- நிலவுப்பையக்கிருகித்துநிற்கும்பூநீர், பாங்கிக்காவலையல்செய்வோனுப்புவேறாய்ப் - பண்ணுவோனந்தவுப்புப்பாழதாமே. (௨௮)

பாழென்றுசொன்னதென்ன புலத்தியாகேள்- பரமசிவனுப்புமங்கே கைத்திடாது, வானென்றசுண்ணம்புகாரசார - மண்ணன்றேநிலவுப்பின் மருவிக்கொள்ளும், கோனென்றசலம்விடு வாருலைக்குள்வைப்பார் - கொடுங்காரந்தானடங்கிக்கொடியகைப்பாம், தானென்றவுப்பையெடுத் தொன்றுமில்லை- தண்ணீரில்மண்கலந்தாற் றாழ்வுதானே, (௫௰)

தாழ்வில்லாப்பூநீறாச் சுன்னமென்று-சாற்றுவார்தழைகளிலேதானேபூட்டி, வாழ்வுபெறச் சலமெடுத்து வேதைபார்ப்பார்-மைந்தனேயதிலேவன்னமில்லை தாழ்விலாச்சத்தியுவர்சாரத்தெண்ணெய்-தான்கலந்துசிவசுன்னந்தணிந்துபோச்சு, நாளிலே சிவவுப்பைச்சத்தியுண்டு-நாரிமருந்தேபெரிதாய்நடப்புமாச்சே

நடப்பானசத்தியெனுஞ் சாரம்விஞ்சி-நற்சிவனார்காரமன்றேநாட்டமாச்சு, தடிப்பானகாரத்தையுண்டசாரந்-தன்குணமுமாறியன்றேதவறிப்போச்சு, அடைப்பானகானகத்திற்புலியுங்கண்டே-யப்புலியாற்கானகமுமழிந்தாற்போல - உடற்போனுவுயிர்நிலையா வாறுபோல-வோகோகோகாரசா ரங்கள்போச்சே,( )

போச்சென்றுமலையாதேசத்திசாரம்-புட்பிக்குநாளையிலே பூண்டுபாரு,வாய்ச்சுதென்றுகடனீராக்கவிழ்ந்துமேகம்-வாங்குகின்றதன்மைபோல் வாங்கும்பூநீர், நீச்சென்னுஞ் சிவனுப்பைச் சத்தியுப்பை-நினைவாகவெவ்வேறாய்ப்பிரித்துவாங்கி, ஆச்சென்ற யந்தவகை யுபாயமெல்லா-மைந்தாங்காண்டத் துறைப்பேனறிந்துகொள்ளே, (௫௫)

கொள்ளப்பா கடைசியைந்தாங்காண்டத்துள்ளே - கோள்சிறிதுமில்லாமற் பிரித்துரைத்தேன், ஏள்ளற்கதவறுமல்சொல்லினேனு-லீசனுப்பையெடுக்கின்ற வியல்பையெல்லாம், தள்ளற்கநான்சொன்ன படியேநீயுஞ் - சாதித்துக்கற்சுன்னத் தொழிலைப்பாரு, கொள்ளற்கமற்றவெல்லா முப்பேயல்ல - கூறுகின்ற மதிவெண்பா நூறும்பாரே, (௫எ)

கல் லுப்ப றிதல்,

நூறானவுரோமருஷி யைந்நூறும்பார் - நுணுக்கமதிலறியவென்றே லிந்நூல்பாராய், சாறானமுப்பதிலேகைபாகங்கள் -சவ்வியமாஞ்சாகரத்திற் காலைப்பாராய்,பேறான வின்னுமற்ற நூல்களெல்லாம்-பேசாதுகருக்குருவும்பிடித்துநன்றாய்த், தேறாதுசிவவுப்புத்திறந்திடாது-செய்பாகங்கைபாகஞ்செப்பிடாதே. ( )

செப்பினேனுப்பினுட் செய்கையெல்லாஞ் - சிவவுப்பேமுதலைந்துஞ்சேரச்சொன்னேன்,உப்பெல்லாம்வழலையென்றுசித்தர்சொன்னு- ரோகோகோநிலவுப்புத் தானுமொன்று, தப்பில்

லாக்கல்லுப்புத் தானுமொன்று-சாரமெனும்பூரமரம் வெடியுப் பொன்றே,அப்பனேயிவைகளெல்லாமாதியுப்பா-மவையுடனே சிவவுப்பா மதுவுமொன்றே, (௫௬)

அதுவென்னசிவசுன்ன மாகாசத்தை -யடக்கினாரொடுப்பத ற்கரிதாமென்று, யிதியுடனேசொன்னக்கா லெடுத்திடாரோ-மே தினியிற்சித்துவித் தாரமென்றே, உதவிசெய்வார்தங்களைப்போ னூலுண்டாக்கி-யொளித்திட்டாரொன்றான வுப்பைத்தானே, ()

ஒன்றானவுப்பொன்று தீட்சையொன்றென் - றொளித்தா ரோபரிபாடைக் குட்புதைத்தே-எண்ணாயிரத்திரட்டிதிருமந்த்ரத் தையிருநூறாத்திருமூலர் பாடிவைத்தார், வண்ணான்றா னுப்பை வெளியாகச்சொன்னான்-மறுவிலொருதிரைமறவாயுரைத்தார்சித் தர், சுண்ணாம்பைச்சுத்திசெய்ய நீருஞ்சொன்னார்-சத்தவுப்பை யெடுக்கும்வகை சொல்லிடாதே; (௫௮)

சொல்சட்டைமுனிவரிருநூற்றிற்றீட்சை - தோன்றுமென் றுகிழித்தாரோதோடந்தோடம், வல்லவராற்றீட்சைகிழி பட்ட போதே-மற்றவர்கள் சொல்வதற்குவாயுண்டாமோ, சொல்லும காவாக்கியந்தான்கொங்கணன்றான்-செப்புகின்றநூலெல்லாமுப் பேயென்றால், வெல்லரிதுநந்திநிகண்டொருமுந்நூற்றில்-தெரு ட்டினார்மிகச்சற்றுமின்னினாரோ, (௫௯)

பின்னினார்மச்சமுனி நூன்மறைப்பு-வெட்ட வெளிசவர்க்கா ரமென்றேசொன்னார்,தன்னிலைமைபோற்போகருமேகாரசாரந் தானென்றேபேசினார் தப்பில்லாமல், கன்னன்மொழிச்சிறுபிள் ளைச்சுந்தரர்தாங் - களிச்சுன்னமென்றுசொல்லிக் காட்டிவைத்தா ர்.பின்னுமற்றசித்தரெலாம் வழலையென்று-பேசினார்பரிபாடை ப்பேதத்தானே, (௬௰)

பேதத்தைக்காண்பதென்றோ கற்சுண்ணாம்பைப்-பெரியச த்துவாங்கிமுன்னேபிரிப்பதென்றோ, தாதுற்றமதிசாரந்தன்னிற் றாக்கிச்-சமுத்திரமாஞ்சிவகங்கை சார்வதென்றோ,சூதத்தைமணி யாக்கியேமயீசஞ் - சூட்டியொருகுருவாக்கித் தோமில்பைம் பொன், வாதத்தைக்காண்பதென்றோகாயசித்தி- வாகாகச்செய்வ தென்வயசுநூற்றே, (௬௧)

நூறானவயசதிலே யைம்பதாண்டு-நோக்கமில்லா நித்திரை க்கு ளொடுங்கிப்போகும்,கூறானபாலர்முதற்பதினாறாண்டு-கொ ள்வார்க்கஃதறிவில்லாப்பருவமாகும்,நேரானமுப்பத்துநான்கா மாண்டு-நிறைந்தவர்க்குச்சுகதுக்கநினைப்போகோடி, பேறானவி திலெந்த நூலைப்பார்ப்பீர் - பேய்மக்காள் ஞானகுருபின் செ ல்வீரோ. (௬௨)

பின்சென்றுநிழல்போலத் தொடர்ந்துகாத்துப்-பேசாதமவுனரகசியத்தைக்கேளும், முன்சொன்ன வழலையுப்பைப்பிறகேளும்- மூலவிந்துவாசியின்றன்முடிவைக்கேளும் - தன்செயல்விட்டுஞ்செயலிற்றனித்துநில்லுஞ்-சாத்திரமாங்குப்பைகளைத் தள்ளிப்போடும், என்சொல்லுமைந்நூறு மிணங்கிப்பாரு - மிணக்கமறிந்திணங்கியிருமிகத்திற்றானே, (௪௩)

இகத்திலுற்ற முடியுப்பையெடுக்குமார்க்க - மெள்ளளவுஞ்சொல்லாமற்சித்தமெல்லாம், மகத்துவமாம்வழலைநிலவுப்பேயென்று -வழுத்தினார்சவர்க்காரவுப்புமார்க்கம். சுகமதாச்சிவசுன்னநிலவுப்புக்குட்- டோற்றுமதனாலதனைச்சுத்தியாக்கப், பகுத்தசிப்பியண்டநீர்தேசிபூசி-பலபலவாஞ்செயநீரிற்பாடந்தானே (௪௪

பாடமென்னப்புடமெரிப்புச் சுண்ணாம்புக்கல் - பாய்ச்சியேநீர்விடுதல்சுட்டரில்வாட்டல். ஈடமென்னவிதனாலே சவுக்காரத்தி-லெண்ணெய்க்கக்கும்படிமுடித்தெடுப்பார்சுன்னம், நாடுகின்றசுன்னத்தாலுப்பைக்கட்டி-நன்றானதாளகநல்வங்கங்கட்டி. ஆடுகின்றபடிசேர்த்துச்சிந்தூரித்தே - யாறேழெட்டொன்பதுமாற்றுவாரே. (௪௫)

மாற்றாகுமிந்தமட்டுங் காணவென்றால்-வழலையுப்புநிசமாகவைத்தாலுண்டு, காற்றானவழலைசவர்க் காரந்தன்னைக்-கந்தல்கந்தலாப்பிரித்துக் கசடர்ச்சொன்னார், கூற்றானமண்ணுக்குந்தண்ணீருக்குங்-குடித்தவெண்ணெய் கக்காமற் குளிர்ச்சியீந்தார், பார்த்தாவதொன்றுமில்லை வண்ணானுக்குப் -பழஞ்சீலை வெளுப்பதற்காப் படித்திட்டாரே. (௪௬)

பரங்கிசவர்க்காரம்.

படித்திட்டவுலகத்தார்மகாசீனத்தார்-பரங்கிசெய்தசவர்க்காரம்பண்பன்றாமால். தடித்திட்டநிலவுப்பைக்குறுக்கிப்போட்டான்-சாரமதில்வெடியுப்பைத்தள்ளிப்போட்டான், வெடித்திட்டகல்லுப்பைக்குளிரப்போட்டான். வீணானகற்சுண்ணமிகவும்போட்டான், எடுத்திட்ட வெண்ணெய்தனை மிதக்கவிட்டா - னென்னசொல்வேனுண்டைமிகவெடுப்பாச்செய்தான், மடித்திட்டபுத்தியினான் மயங்கிப்போனான்-மாறாட்டமாச்சுதிந்த வழலைதானே ()

வழலைமுறை வரிசையாய்ச் செய்தாலுந்தான் - மக்களேதங்கம்விட்டால் வன்னமில்லை, விளைவென்றுசொன்னதென்னவாகாசித்தின்-விந்தென்ற வீசனுப்பைவிட்டதாலே, தொழின்முறையாய்முடித்துவைத்த வழலையையா-சொர்ன்ன மல்லாற்சொர்ன்ன முண்டுசுயம்பேயானால், பழமென்றரசனையடா வீசன்விந்துபட்டவிற்றொட்டவிடம்கம்பொல்னாமே (௪௮)

பசுப்பொன்னைமாற்றதிக மாணியில்லை-பருகினு லூழிகண்
டபரமனுவீர், விசும்பென்றவாகாச வுப்புப்போயின் - வெடியுப்
புநிலவுப்பும்வீணுமையா, நிசமாகச்சொல்லவில்லைசவர்க்காரத்தி
னெடுநாளாய்நீருழைத்துநின்றாலும்மே, நசையிரசம்வேதையி
டமுடியாதையா- நல்லபுத்தியுங்களுக்கா நான் சொன்னேனே()

நான்சொன்னேனென்றெண்ணி விடவேவேண்டா- நந்தீச
ருரோமருஷி யைந்நூறும்பார், வான்சேர்ந்தவுப்பெடுக்க வகை
யைச்சொன்னான்-மறதிகொண்டுமாய்வதுதானென்னே யப்பில்
தான்சொன்னபடிகுவிந்துநீதான்பார்த்தாற்- சாண்வயிறுவளர்ப்
பதல்லாற்றவங்கிட்டாது, ஏன்சொன்னேனிவ்வளவும் புலத்தியா
வல்-லியமனைக்கொன்றெந்நாளுமிருக்கவன்றே. (ருய)

இருக்கவன்றோபிரமவித்துச்சிவமாஞ்சுன்ன - மெடுங்களெ
ன்றேபாடிவைத்தேன் கடைக்காண்டத்தில், குருக்களொரு புத்தி
யுனக்கிருக்குமாகிற்-கூற்றென்னுஞ்சமுசாரவலைகுட்பட்டுப்,பெ
ருக்கிமாயுண்டுடுத்துச் சாதற்கேது-பிரமையுனைத் தொடராமற்
பேசக்கேளு, தருக்கொளுயர்தா துவன்ன வழலைப்போக்குத்- த
னையுரைப்பேனதையறிந்து நீசெய்வாயே. (ருக)

செய்யவேவழலை விட்டோன்றருசுகாணான் - செயமானதுரு
சுவிட்டோன்பொன்னைக்காணான்மெய்யானவேமப்பால்விட்டா
னால்-வீணாகுஞ்சூதமுதற் பாடாணங்கள்,சையோகரசபீசமில்
லாவேதை-சாதகமாவொன்றுமுதலைந்துகாணும்,கையாரப்புடத்
தில்வைக்கப்புகைவதன்றிக்-காரீயப்போலதிலே கழன்றுபோமே.

பூநீர்த்தீட்சை.

கழன்றுபோகாதபடி வழலைமார்க்கங்-காட்டுகிறேன்கற் சுன்
னம்படிதானொன்று, தழைந்தோங்கும்படிநல்லவமுரியோட்டி
ற்றுனைத்துக்கலக்கிவைப்பாய்தாழ்வில்லாமல், குழைந்துபோ
காதபடிதெளிவைவாங்கிக் - கொட்டப்பா தீட்சைசெய்தபுட்ப
மெட்டும், முழன்றுபோகாமலே கலக்கிக்கொண்டே யுத்தமனே
செயும்வகையை யுரைக்கக்கேளே. (ருஉ

கேளப்பாமேலான தீட்சையுப்புக்-கிரமமதாய்ப்படியிட்டு
க்கிண்டிப்போடு,ஆளப்பாதீட்சையென்ன வென்பாயானா-லறை
கடலினுப் பன்றோவாயினுதம், தாளப்பாகடைவதுபங்குனியின்
மட்டுந்-துரிதமாரவியில்வைக்க வுப்பேயாகும், ஆளப்பாவுட்பெ
டுத்துக்கிறிப்பார்த்தே- யடியினடுவெடியுப்புமுடிமேல்வையே(

வெடியுப்புத்தீட்சை.

மேலானமுடியிலைந்து பலமேயாகு-மிச்சமதா வடியிலே
பலந்தானெட்டுக்,கோளான நடுவிணங்கள்படிதானொன்றுகொட்

டப்பாசமாதியிலே யிட்டுமூடி, நூலானமேன்மூடிசீலைசெய்து, நூற்றெருவிற்புடம்போட நீற்றுப்போகும், மாலானவண்டநீரிட்டேயாட்டி-மகத்தானவில்லைசெய்து புடத்திற்போடே. (ருரு)

புடம்போட்டேயாறினபி னெடுத்துகொண்டு - புதியவோரமுரியிலே கரைத்துக்காய்ச்சித்,திடம்பெற்றுக்கம்பியதாய்க்கட்டிப்போகுஞ்-செயவுப்பிலரைப்படிதான் றூக்கிக்கொண்டு, குடநிறைந்தவெண்ணெயோரரையாழாக்கிற்- குழையவேகலக்கிநன்றுவரைத்துக்கொண்டு, தலங்காட்டும்வேகாத வழலைநீரைத்-தான்காய்ச்சிவிட்டிடுவாய் தாழ்வில்லாதே. (ருசு)

இல்லாமற்போகாதே யெண்ணெயுப்பை- யெரித்துமெல்லக்காய்ச்சிடவேயிருக்கும்பாராய்உல்லாசமாகவேயண்டம்போல-வுருட்டியேரவிமுகத்தி லுலரப்போடே,எல்லாருமிந்தமுறை பாடமாட்டா-ரிஃதன்றோவீசனுப்புக் கோச்சொன்னேன், வல்லவராமச்சர்கொங்கணர்தாஞ்சொன்ன-வழலையிந்தமுறையில்லை மகிழ்த்துபாரே. (ருஎ)

சவர்க்காரம்.

பாரப்பாவிப்படியே சவர்க்காரத்தைப்-பாடாமன்மறைத்தாரே வழலைமார்க்கம், நீரப்பாநிலவுப்பே வழலைக்காதி- நின்றதுறுற்றுருசைமுந்திக் கொல்லுங்கொல்லும், பேரப்பாதுருசாலே சூதங்கட்டும்,பேய்மக்காள்சூதத்தாற் றங்கநீறும், தாரப்பா தங்கமிட்டசிந்தூரத்தைத்-தாக்கிஞலஞ்சதுவுந் தப்பாதன்றே.(ருஅ)

தப்பாமல்வழலைசவர்க் காரசுன்னஞ்- சமுசயங்களில்லாமல் வெளியாச்சொல்வேன்,மெய்ப்பானகுப்பிடுங்கற்சுன்னமார்க்கம் விள்ளாதேமறைத்தாரே சித்தரெல்லாம்,அப்பாகேள்கிளிஞ்சலெனுமூமைதன்னை - யடைவாகச்சுத்திசெய்யும் வகையாதென்றால் உப்பானவுவருடனேகற்சுண்ணாம்பை-யுணர்வாகத் தண்ணீரிற்கலக்கிக்கொள்ளே. (ருகூ)

கிளிஞ்சிற்சுன்னம்.

கலக்கியதிலூமைவிட்டெரிப்பாய்நீயே-கன்மஷீங்க ளொருபுரிதுங்காணுதோடும்,வலுக்கமுத்துவீரமுடன்சீனஞ்சூடன் வளருறவேநவாச்சாரங்கல்லுப்போடு,பெலக்கவே வகைவகைக்கோர்பலமதாகப்-பிசகாமற் கிளிஞ்சிலஞ்சுபலந்தானையா,இலக்சமுள்ளவண்டநீ ரொருக்கம்பாலின்-றெளிவுவிட்டு முன்மருந்தைத் திடமாவாட்டே. (சூய)

ஆட்டியேசிப்பிக்கு மேலுங்கீழு -மப்பிப்பின்னூறெருவிற்கிடத்தைப்போடு, நீட்டியவோர்சுன்னமுமா மந்தநீற்றை- நினைவாகவெண்கருவா லரைத்தேயூது,நாட்டியேகடுஞ்சுன்ன மாகக்க

ட்டு-நாலாறுதினமரைத்துப் புடத்திற்போடு,தாட்டிகமாக்கடுஞ் சுன்னஞ் சிப்பியாச்சு-சாதகமா வின்னுமொரு சுன்னஞ் சொல்வேன், கூட்டுடனேயண்டங்களைந் துவாங்கிக்-குணமான பீங்கான் பாத்திரத்துள்வைத்தே. (சுக

அண்டச்சுன்னம்.

வைத்தவுடன்பழச்சாறுபடிதானொன்று-வாகாக முழுகவிட்டதனிற்றூய்மை, பெற்றகடுங்காரசீ னம்மிரண்டும்-பொடிசெய்தேபோகிட்டுப் பழச்சாறூடு, குற்றமில்லாக்கடுவெயிலி லேழுநாள்வை - கூசாமலண்டமெலா முருகிச்சாற்றில், அத்தமெனவுறைந்திருக்கு மெடுத்துக்கொண்ட- யண்டத்தின் சவ்வெல்லா மறுத்துப்போடே. (சுஉ

அறுத்தபின்புமூன்றுநாள் ரவியிலிட்டே-யப்பனே யண்டத்தினீறுதன்னை,மறுத்தவிர்த்தகல்வமதி லிட்டே நன்றாய்- வளமானவெருக்கம்பால் வார்த்தேயாட்டி, குறிக்குமொருசாபமட்டுமரைத்தெடுத்தே-குணமாகவில்லைசெய்து ரவியிற்போடு, செறித்தபின்புமேன்மூடிச் சீலைசெய்து-சிறுபிள்ளாயைம்பதெருப்புடத்தைப்போடே. (சுங)

போட்டதனையாறியபின் னெடுத்துக்கொண்டு-புகல்பத்துக்கொன்றாகவீரங்கூட்டி, நாட்டமுடன்வெண்கருவாலரைத்துவில்லை நல்லிரவிதனிற்காயிறபுடத்திநீறும்,தேட்டமுடனெண்பதெருப்புடத்திலையா-சிவசிவாகடுஞ்சுன்ன மண்டந்தாமுங், கூட்டிவிடுமுற்சிப்பிச்சுன்னத்தோடு-கூர்மையுட னிச்சுன்னங் கூடச்சேரே.

சேரப்பாவிச்சுன்னந் தனக்குநேராத்-திடமான நவாச்சாரஞ்சேர்த்தேயாட்டில், கூரப்பாநெட்டடங்கிப்பனிநீராகும்-கோபமெனுஞ்சிப்பிநீர்கொடுஞ்சுறுக்கு. வீரப்பாவண்டவுப ரசத்திலாதி-வெடியுப்பைக்கட்டுதற்குவிந்தமிந்நீர்,நேரப்பாவிந்நீர்றைப்பதனம்பண்ணு-நிசமானவழலைமுறைநிகழ்த்துவேனே. (சுரு)

வழலைச்சுன்னம்.

நிகழ்த்துவேன்முன்சொன்ன சவர்க்காரத்தை- நிலைபெறுகற்சுன்னம் பாண்டத்திட்டு, மகத்துவமாஞ்சவர்க்காரங்கிளியாக்கட்டிவாகாகவைத்ததின்மேற் சுன்னங்கொட்டித், துகளில்படிநீர்வாருபொங்கிநீறுஞ்-சுகமாகநீறியபின் னெடுத்துக்கொண்டே, இசத்தினிலே நூறுதர நீறச்செய்யி - னென் மகனே சவர்க்கார மென்புமாமே. (சுசு)

எலும்புபோலேயிருக்கு மெடுத்துப்பார்க்க-வெண்ணெய்க்கக்கிமேற்படர்ந்து கறுத்தேநிற்கும், சிலம்புண்டாமல்லிகைப்பூச்சாறுவாங்கித்திறமானசவர்க்காரநனையப்போட்டுக், குலுங்காம

றவிமுகத்திலெழுநாள்வைத்துக்-குணமானமல்லிகையினிலையை
வாங்கி, அலம்பாமற்சீலையிலே பரப்பிக்கொண்டேயதின்மேலே
சவர்க்காரக்கட்டிவையே. (௬௭)

கட்டிக்கு மேலுமந்த விலையான்மூடிக்-கனமான கிளிபோலே
சுண்டிக்கொண்டு, சட்டியன்றிப் பானையிலே நெல்லுமிட்டுதன்
ணீரும்வார்த்தரியசவர்க்காரத்தின்,பொட்டணத்தைதொங்கவிட்
டுமேலுமூடிப்,புகையாமற்றீயெரிப்பாய்நெல்விநாவி,திட்டமா
யதன்மேலேபடியவேகுந்-திடமாகவெந்தபின்பிறக்கிடாயே. ()

இறக்கியே இந்தவிதமூன்றுவிர்த்தி-யென்மகனே யவித்தவித்
துநெல்லாவிக்குள், மறக்காமற்கற்சுன்னம் படிதானிட்டு - வழலை
யைவைத்ததின்மேலேசுன்னங்கொட்டித்.திறக்காமன்மேலுமொ
ருசட்டிமூடித்-திறமாகச்சிறு தொளையிட்டதையும்பின்பு, பிறிவ
றவே மல்லிகையினிலையான்மூடி - பிணங்காமற்கொதிகிளம்பநீ
ரும்வாரே. (௬௯

நீர்வார்த்தேயடுப்பிலிட்டுக்காச்சுகாச்சு-நிசமான கற்சுன்ன
நீறுமட்டும்,பேர்பார்த்துமுன்போலேசுன்னமிட்டுப்-பிசகாமற்
றொளையிட்டசட்டிமூடிச்,சீர்பார்த்துநீர்விட்டுநீற்றுநீற்று-செய
லோடேபதினைந்து தரமுமையா,நேர்பார்த்து நீற்றுகின்றபேர்
தெல்லாநீ நிலைகிளியாய்க்கட்டிவைத்துநீற்றுவாயே. (௭௰)

வாயாரநீற்றுகின்ற சவர்க்காரத்தை-மைந்தனேயவித்தெடுக்கு
மார்க்கஞ்சொல்வேன், தாயானமல்லிகையினிலையைவேறு-தான
ரைத்துக்குகைபண்ணிக்காயவைத்துப், பேயானசவர்க்காரமதற்
குள்வைத்துப்-பிசகாமற்சீலைசெய்துசட்டிக்குள்ளே,ஓயாதுகிளி
ஞ்சினீறதனைக் கொட்டியுற்ற குகைவைத்ததின் மேலுமிநீர்கொ
ட்டே. (௭௧)

கொட்டடாசிலைமண் நன்றாய்செய்து- குலுங்காம லடுப்பிலி
ட்டொருசாமந்தான், விட்டடாதீயாறவிட்டுப்பாரு- வெந்திருக்
குஞ்சவர்க்காரமதனைவாங்கித், தட்டடாவம்மியிலேபொடித்துக்
கொண்டு-சாரவெடியுப்புத்ராவகத்திலையா,மட்டடாசாமமொன்
றரைத்துவாங்கி-வளமானவில்லைமிக விலேசாய்ப்பண்ணே.(௭௨)

வில்லைபண்ணியண்டத்தின் பொடிக்குள்வைத்து -மேன்மூ
டிச்சுண்ணும்புச்சீலைசெய்து நல்லவொருபத்தெருவிற்புடத்தை
ப்போடு- நலமானசுண்ணம்போல்வெள்ளையாகும்,அல்கலிக்மு
ன்வைத்தசிப்பிச்செயநீரொன்று-மதைவிட்டுசாமமொன்றாட்டிப்
பின்பு வில்லைபண்ணிக்காயவைத்து முன்னுள்வைத்த-வீறானகிளி
ஞ்சிலண்ட சுன்னத்துள்ளே. (௭௩)

உள்ளானவீரமொருகழஞ்சுபோட்டேயூறவெருக்கம்பாலால
ரைத்துக்கொண்டு,தள்ளாதசவர்க்காரவில்லைக்கேதான்- சாதகமா

ய்க்கவசமிட்டுச்சீலைசெய்து,மெள்ளவேபத்தெருவிற்புடத்தைதப்
போடு-வெண்ணீறுபோர்ச்சுன்னம்விசயமாகும், துள்ளாதேவழ
லையின்றன்சுன்னங்கண்டாற்றுருசுதன் களிம்பற்றுச்சுன்னமாமே
சுன்னமோனாந்தென்றுமுதற்காண்டத்திற்-சொல்லினேன்ச
வர்க்காரச் சுன்னஞ்செய்ய,வன்னமென்னவைந்துசுன்னங்குகை
யாப்பண்ணி-வழலையைத்தான்கிளிஞ்சிலண்ட செயநீராட்டித்;தி
ண்ணமாக்குகைக்குள்வைத்துப்புடத்தைப்போடு-சிவசிவாசடை
சியிலேசெயமாஞ்சுன்னம்,அண்ணலுமைக்கேயுரைத்தானிந்தவி
த்தை-யம்மையுமன்றனக்கன்பா வறைந்திட்டாளே (௭௫)

வெடியுப்புத்திராவகம்,

அறைந்திட்ட வெடியுப்புத்திரவகந்தா - னப்பனேயன்பா
கச்சொல்லக்கேளு திறம்பெறுநல்வெடியுப்புப்பலந்தால் பத்து
ச்-சீனமதையிணங்கனுக்குச் சேர்ப்பாயொன்று, உறைந்திட்டச
வுட்டுப்புப் பலந்தானென்றே- டுத்தமனே வெண்காரம்பலந்தா
னென்று,அறைந்திட்டகல்லுப்புமிணங்கன்நேரா-வரியசீர்வழலை
பலங்காலாமன்றே, (௭௬)

காலாகுந்துருசுவெள்ளையன்னபேதி-கமகமென்றுபரிமளி
க்குங் கற்பூரந்தான் நாலானதிட்சையெல்லாம்வகையொன்றுக்கு
நன்றாகவொருபலமாநிறுத்துக்கொண்டு,சூலானசிப்பியோடுரு
வியப்புந் -தூக்குவாய்பலமொன்றாத் தாகளினல்ல,மாலானமரு
ந்தெல்லாம் பொடித்தொன்றாக்கி-மைந்தனே குப்பியனைப்பங்
குமாட்டே, (௭௭)

மாட்டியேயடுப்பேற்றியெரிநேர்பாக-மைந்தனே மேற்குப்
பிவாய்மூக்காநீர்,ஊட்டியேபுகையுடனேவடியுநீரை-நீரைவாகப்
பீங்கானினேராவாங்கு, தேட்டமாய்வழலையிட் டெரிக்குமிந்நீர்
செப்புகிறேன்வழலைச்குத்திட்சையாகும், தாட்டிகமாவிருப்பன்
சாண்வயிறல்லாமற்-சமுத்திரமெல்லாம்வயிறே சண்டிமாடே()
மாடோர்கேள் வழலைசவர்க்காரச்சுன்னம்-வகையாகக் கைம்முறை
யாவைத்துக்கொண்டு,நாடோடேநீயிருந்துவாழவேண்டி-னல்ல
சவர்க்கார மெனுஞ்சுன்னத்தாலே- கூடாததுருசி னுப்பையுமுன்
னேகட்டிக்-கொண்டுநல்ல சூதத்தைக்குளிகையாக்கித், தேடவே
கெந்திதங்கநாகஞ்சேர்த்துச்சிந்தூரஞ்செய்துநவலோகத்தீவாய்

நவலோகமொன்றுக்குமொருமாவீந்தா- னுலாறுமாற்றுரு
நல்லவேதை; பூலோகத்திருந்துபெண்டிர் பிள்ளையோடு-போச
னங்கள்செய்துவரிற்புத்தியுண்டாம், தவமானயோக நிட்டைகா
யகற்பந்-தன்னிலேமனதுவைத்துச்சார்ந்தாயாகிற், சிவமானவா
காகவுப்பைத்தேடித்-தேகசித்திமுதலிருபத்தைந்துஞ்செய்யே(
செய்கின்றசித்தியோரிருபத்தைந்தும்- சித்தருக்காமென்றசொ

ன்ன பொதிகைத்தேவே, ஐயமில்லாதடியேனுக் கருள்கவென்ன
வதன் பெயரைச்சொல்லுகிறேன்புலத்தியாகேள் மெய்யானசிவ
தீட்சைசத்திதீட்சை வேதாந்தஞ் சித்தாந்தமேலுங்கீழும், உய்ய
வேமந்திர சித்திமவுனசித்தி - யுண்மையுடன்காய சித்தியுடனீ
கேளே. (அக)

உடணவெட்டெழுத்து மஞ்செழுத்து - முற்றவாதாரசித்
திபிரசாதசித்தி திடமானவான்மசித்திதத்வசித்தி- தேகசித்தியாதா
ரசித்தியோடு,குடமான குளிகைசித்திசொரூபசித்தி-கூரறியதத்வ
பிரசாதசித்தி, மடலானவாதசித்தி யோகசித்தி - மகிழ்வரப்ரசாத
சாம்பவத்தின்சித்தி (அஉ)

சித்திதரும்போதசித்திகாலசித்தி-திறமான ஞானசித்தியிவைதனை
யா, முத்திதனைத்தருமிருபத்தைந்துசித்திமுதன்மையாஞ்சித்தர்
களுக்கெய்து மெய்தும்.இத்தனையுஞ்சித்திக்கவேண்டுமென்றாலீ
சனுப்புஞ்சிவனுப்புமெடுத்தால்வாய்க்கும்,புத்தியிலாதுடல்வளர்
க்க வேண்டுமாயின்-புகலுகின்றசவர்க்காரப்போக்கைப்பாரே.()

சிவசுன்னம்.

போக்கற்றசிவசுன்ன மில்லாக்காரம்-பொன்றருமோவென்
றெனைநீபுகழ்ந்துகேட்டால்,வாக்காரசசொல்லுதற்குமனமோவி
ல்லை-மலையிலுள்ளசித்தர்கட்மறைவுக்சாகத்,தாக்கானசவர்க்கார
வழலையென்று-சாற்றினதேயல்லாம னிசமேயன்று,நீக்காமற்சிவ
வுப்பைத்தின்றேயென்று-நிலவுப்பைத்தின்னும னிகழ்த்தினரோ.

ஆரணிந்தவேணியுடைச்சிவனருப்பை - யன்னைக்கேதின்
றுவிட்டதடியாமுப்பூ, நீரணிந்தசிவவிந்தைச் சத்தியுண்டு - நிசமி
ல்லா வளையலுப்பைப் பெற்றாணீலி, வாரணிந்தசத்தியே தாயு
மானாள்வளையலுப்பைப்பிள்ளையென்றாண்மரித்துப்போச்சு,கூ
ணிந்தவாகாசவுப்பைக்காணக்குடிலிலிட்டுக்கும்ப மெனுநாளெ
ன்றாளே. (அரு)

கும்பமெனுமாசியுந்திங்களேபங்-குனியிடபமேடமாங்கு
டிசையோடு,பம்பரம்போன்மனமுழன்றுதிரியவேண்டாம்-பா
ரதனின்மடைவாயிற்பறவைபோல, வெம்புகின்றயசுமைநிறமுற்
றுப்பாருமேலெழுந்தவூசரத்தினுணுக்கம்பாருஅம்பலவர்நடன
மிடுஞ்சத்தம்பாரா-யறிவதற்குக்கடையிலைந்தாங்காண்டம்பாரோ

குருமுடிக்கும்வகை.

பாரப்பாசிவசுன்னம்பண்ணுமார்க்கம்-பாடுகிறேன்குரு முடிக்
கும்பாகந்தன்னை ஊரப்பாவெளிதிறந்துசொன்னீராண, லொரு
பொருளுஞ்சிதித்யா துரைத்தேன்சாபம்.சீரப்பாநற்சிடனுனற்
சொல்லு-தெளிவானேலிந்நூலைத் திறந்துகாட்டுக், கூரப்பாவறி
யானுக்கீந்தாயானற்-குற்றமுள்ள வெழுநாகிற் குடியாவாயே.()

குடியாகப்போகாம லீசன்வித்து- கூறரிய நிலவுப்பிசிகூட்
டம்பார்த்து, அடியோடுகல்லாமலிக்காண்டத்திற்சொன்ன - வ
ணடையாளப்படியெடு வாகாசவிந்தை,இடியோட்டெபிறந்தவன்னி
மிகுதியாவுண்-டெடுப்பானெனெடுக்கின்றவெடையாதன்னால்,ப
டிமீதிற்பணவெடையாமுப்பினுமேல்- பாய்ச்சலாப்பூமியெல்லா
ம்பழுக்குமன்றே, (௮௮)

பழுக்கவே சிவவிந்துப் பாகுஞ்சுன்னம் - பாலகனேபண
வெடைதான் பார்த்தெடுத்துச்,சழக்கில்லாப்பொருளெல்லாமா
யினுதந்-தானறியப் பாலறயுட்புத் தடையில்லாமல், கொழுக்க
வேயெண்கழஞ்சுநாதநாழி கொண்டுவந்துபாலறடட்டைபச்சுண
மாச்சேர்த்து,வெளுக்கவேகடைந்தினந்தோர்நாள்மட்டும்-வெ
யிலில்வைக்கவாடைகட்டிமிதக்குப்பாரே (௮௯)

மிதக்கின்றவாடைதனை யெடுத்துப்போட்டு- மிகுந்தநீர்மு
ழுதும் பீங்கானில்வார்த்து,மதிக்கின்றபனியில்வைப்பாய்சந்திர
னுளின் - மைந்தனே மூன்றுநாளானபின்பு, துதிக்கின்றசுத்தகங்
கை நீர்போலாகுந் - துகளிலதை வாயில்விட்டாற் கைத்திடாது,
கதிக்கின்றவிந்நீர்மற் றொருபீங்கானிற்- கனமாகவிட்டபின் புநிக
ழ்த்தக்கேளே (௯௰)

நினைவரியவாகாயசிவனுர்வந்து- நிலவுப்புக்கடுத்திருந்தநிசக்
காரந்தான், கனமானபிரமகற்பக்கற்சுண்ணம்பைக் -கலகமெனு
மதியுப்புபணந்தான் றூக்கிப் பனியதனில்வைத்தசுத்தகங்கைக்கு
ள்ளே-பணவிடையாமுப்புட்டி ரவிமுன் பாகத்தினமொருநாழி
கைவைக்கத்தயிர்போற்சுத்த.சலந்திரண்டிரவிதனிற்றீர்க்கமாமே

தீர்க்கமாய் வயிரம்போற் கட்டிப்போகுந்-திரண்டமுத்து
மணிபோலே திரட்சியாகும், பார்க்கவே கண்கூசும்வயிரப்போ
லே - பரமசிவனுப்பினது பழக்கத்தாலே,மார்க்கமாவிதனையெ
டுத் தைஞ்சுசுன்னம்- வளர்குகைகயில் வைத்ததின்மேற் சிலைசெய்
தே, ஏற்கவேகவுதாரிப் புடத்திற்போட்டா-லீசனுட்புச்சுன்னம
தாயிருக்குந்தானே, (௯௨)

இருக்கின்றசுன்னமன்றோவழலைச்சுன்ன - மேடமனதுட்ண
டாக்குமீசன்சுன்னம்,திருப்பொதிந்தகாரசாரத்திற்சுன்னஞ்- சி
வசிவாவண்டபிண்டந்தெளிவாஞ்சுன்னம், பெருக்கின்றசத்திசிவ
ஞ்சேர்ந்தசுன்னம்- பிரபலமாந்தாயின்விந்துசேர்ந்தசுன்னம்,உ
ருக்கினத்தூக்காதியெனுமுசராச்சுன்னமுற்றமண்ணுந்தண்ணீரு
முறுதியாமே, (௯௩)

உறுதியாய்ச்சூதத்தைக்கட்டுஞ்சுன்ன -மொப்பிலாத்துருசை
முந்தி நீற்றுஞ்சுன்னம்,மறுவிலாத்தங்கத்தையாட்டுஞ்சுன்ன-மா
ற்றறவிநிமிளைசத்துவாங்குஞ்சுன்னம், பரிதிபோற்காயசுத்திப

வீனுஞ்சுன்னம்-பாங்காகக்கமனமிட்டுப்பாயஞ்சுன்னம். சுருதிமுடியவமிருத்துத் தட்டுஞ்சுன்னந்-துகளிலதுபூரணமென்றியம்பலாமே, (௯௪)

இயம்புகின்றபாடாண மெட்டெட்டுந்தா, னென்மசனேசுன்னமதாவியைக்குஞ்சுன்னம், பயம்பெறவேயுபரசநூற்றிரண்டுபத்துப்-பம்பரம்போலாட்டுவிக்கும்பரமாஞ்சுன்னம், களிம்புறையுமுலோகங்களனைத்துந்தத்தங்- களிம்பற்றுப்படிகமதாக்காட்டுஞ்சுன்னம்,செயம்புகலுமலைமரமண் செடிபூண்டெல்லாஞ்-செம்பொன்னுச்செயும்பரம சிவசுன்னம்மே, (௯௫)

சிவசுன்னந்தட்சிணாமூர்த்திமுன்னஞ்-செனகாதிருஷிகளுக்குச்செப்புஞ்சுன்னம்,தவமானபதினெட்டுச்சித்தர்க்கெல்லாஞ்,சகலசித்துங்கொடுக்கின்றசத்திசுன்னம்,நவசுன்னந்துவாதசத்தைக்கடந்தசுன்ன-நாதாந்தகுண்டலிக்குணண்ணுஞ்சுன்னம், பவமென்னுங்கடல்கடந்து ஞானதீபப் -பரஞ்சுடராநின்றிலங்கும்பரமசுன்னம், (௯௬)

சுண்ணம்பிற்கடுகிலொருநாலுபங்கு-சூதமொருசேரதனிற்றாவினக்கால்,அண்ணாந்துபார்த்திருக்கக்கிறுகிறென்றே-யாடியேமதமதனையடக்கும்பாரு, அங்காந்துதிரியாதேயந்தச்சூத-மணுவளவுமலையளவிலெடுத்துப்போட,விண்ணேந்துமேருவைப்போன்மாற்றுக்காணும்- வேதைகளின்றுறைகோடிவிள்ளொணாதே ()

விள்ளவேயங்கியுடைச்சூதந்தன்னில்- வெந்தியமவ்வளவெடுத்துப்பாலிற்போட, வெள்ளைநிறப்பாரிரண்டேயுறைந்துநிற்கும் வெள்ளமுதைமூன்றுதினந்தின்றாயானால், கள்ளமன்று தேகந்தானருணன்போலாங்-காயசித்தியோகசித்திகைக்குள்ளாகும் எள்ளளவும்பிசகில்லையூழிகால-மிறப்பின்றிச்சூதமுண்டிருக்கலாமே ()

இருக்கலாம்வெஞ்சமனுமேவல்செய்ய- விவ்வுலகுமவ்வுலகுமென்றும்போற்றப்,பெருக்கலாங்கைலைவாழீசன்பாதம் - பெற்றிடலாஞ்சித்தருடன்பேசலாகும், நெருக்கமுறுமாயிரத்தெட்டண்டந்தம்மை-நிமிடத்திற்சுற்றிவந்து நிலைக்கலாகும்,முருக்கலாமீசனுப்புமுருக்கேயல்லான்முத்துமேமற்றவுப்பின்முடியவாறே ()

ஆறானவிரண்டாங்காண்டத்துக்குள்ளே- யருவழலைக்குருச்செய்புமார்க்கஞ்சொன்னேன்,கூறானமூன்றினிலே கற்பமூலங்-குணமானவெடைபஞ்சீகரணஞ்சொன்னேன், மாறிலாநாலினிலேயோகஞ்சொன்னேன்- மாசிலுப்பெடுக்கும்வகையைஞ்சிற்சொன்னேன், தேறுவாயுப்பெடுக்கும்வகையைநன்றாச்-சீரானவிந்நூலாற் சிவமுண்டாமே. (௱)

இரண்டாங்காண்டம்-முற்றிற்று.

௩-காண்டம்-௨௫-விருத்தம்,-௨௱

# மூன்றாங்காண்டம்.

சிவமானபூரணமே நாதவிந்து-சின்மயமாநின்றவொரு பரமேயாதி, உவமானமில்லாத பரந்தனக்கே-யுறவாகி நின்றவொருநாதமந்த, நவமான நாதவிந்திரண்டுமொன்றாய்-நன்மை செறியரிதிமதி சுடர்களான, பவமறுமிந் நூன்மூன்றாங்காண்டத்திற் கப்-பராபரனுமைமங்கரனே காப்பாமன்றே. (௧)

காப்பானவிந்தநூன் முற்றும்பார்க்கிற்-கைகாட்டுமாரியனே போற்காட்டுங்காட்டும், கோப்பானசாகாதகாறுனன்மைக்-குணத்துயர்ந்தபுலத்தியவசரமாமென்று-நீப்பரியபரிசுத்த வமுதகங்கை-நிலைபிறந்தபூவழலை முப்பூமார்க்கம், மாப்பெரிய விந்நூலினூற்றுக்குள்ளே-வளர்நடஞ்செய்பராபரமாஞ்சோதிகாணே ௨.

சோதியாய்நின்றவழிதீட்சையெல்லாஞ் - சொன்மறைவேறொன்றுமில்லை யைந்தாங்காண்டம், வாதியாம்வாம மதுதீட்சை தீட்சை-வாம மென்றநாதமது பூமிநாதம், வேதியாநாதவிந்தண்டபிண்டம்-வேதமது நால்வேதமாறுசாத்திரம், ஆதியாநாதவிந்தப்பப்பையா-வரகராவிதிற்பிறந்தவண்டந்தானே. (௩)

பஞ்சீகரணதீட்சை.

அண்டமெனிலண்டமன்றுதியண்ட-மாகாசம்பிருதுவிதண்ணீர்போக்கற்ற,பண்டமெனிற்பண்டமன்றுபரமே சோதியகராதபொருளையாநந்தியாவட்டம், கண்டமெனிற் கண்டமன்றுகலைகல்லு- கருவாகியுருவாகி யைஞ்சாம்பிண்டம், தெண்டமென்றுநினையாதே நந்திக்கல்லு - தெளிவான பிருதுவியா லொன்றுமாச்சே. (௪)

ஒன்றானபிருதுவிபத் துயிர்தானேயொன்-றேகோவப்பிளாந் தச்சிரண்டாம், வன்மைமிகுதேயுபத்துச் சீவன்மூன்றுவகையானவாயுபத்துச்சீவனான்காம், அந்தரம்பத்துச்சீவனைந்தென்ப-ராகரபஞ்சகரணதீட்சையாச்சு, பன்னரியபூதவழிபிரித்துச்சொன்னேன்-பகரார்களாகாச வப்பைத்தானே. (௫)

நாதவிந்து-அண்டபிண்டம்.

உப்பென்றுலுப்புமுதற்கற்பூரந்தா னுடலிருந்தாற்குமரிகநிசமைப்பாளன்றே, அப்பென்றலப்பதினுலுப்புண்டாச்சு- தரகரவுப்போடுபுளியிஃதேயாச்சு,தப்பென்றதீட்சைதச தீட்சைதானே-யறைவாதமொருவரா லறியப்போமோ,மப்பென்றுலிரண்டாங்காண்டத்தின்முப்பூ - மாசிலைந்தாங்காண்டத்தின் மறைப்பிராமே. (௬)

மறையாமற்சவுமியசாகரமுங்காணு-மதிவழியேதானறிந்து தீட்சைசோதி,கறையற்றதீட்சையில்லாப் பாதகர்க்குக்-காணுதே

யொருநாளுங் கடினமாகும் மறுவற்றகற்பூர சோதியின்னல்-வா மத்தினந்திபொளி காணலாகும்,மறையாத சோதிகடந் தப்பாற் சென்றுன்-மகத்தானகணபதியைக் காணலாமே. (௭)

காணலாந் துரியமொடு துரியாதீதங்-கனகமயசிதம்பரத்தின்மே லாம்பீடம், காணலாமாறுக்கு மேலாம்பீடங் - காதலனேகணப தியு மெதிரிற்றேன்றும், காணலாங்கோடான கோடிபூசை-கருத் தோடுசெய்தக்காற் குருவைக்காண்பாய்,காணலாம்வங்கென்றுபூ சித்தக்காற்-கருங்குழல்வல்லபைநல்வரமளிப்பண்மன்றே (௮)

## கணபதிபூசை.

வல்லபையுங் கணபதியு முன்னேக்கண்டு-மவுனமந்திர முப தேசித் தருள்வர்பாராய்,அல்லலறவிப்பொருளேவெளியிடாதே-யாம்ஒம்உஊம்சிவாவெனயா னறியச்சொன்னேன். சொல்லறியக ணபதிபின்பூசையாச்சு-துகளிலாப்பரப்பிரம பூசைதன்னே, விள் ளரிதுவேணபடி செய்யினுச்சி-வெடித்துபரித்திடு வையிஃதுண் மையாமே. (௯)

உண்மையாமுறுதிகொண்டுற்றுப்பார்த்தா - லோகோகோ தெரியுஞ்சா கரத்தினேர்மை, உண்மையாவங்கென்றுவாசியாலே யுறக்கும்பித்திடிலொர்பரப்பிரமவாயில் பண்பாகப்பளிச்சென் றுதிறக்கும்பாராய் - பாலகனே பரப்பிரமவாயில்சாணும், வண் மையாநாற்சாதி யிடமுந்தோன்றும் - வாவாவங்கென்று தம்பிப் பாயே. (௰)

## பிரமன்பூசை.

தம்பித்தேயிரேசகபூரகமுஞ்செய்து-சாற்றுநெற்றிநேர்மைசு ழுமுனையைமேவித்,தம்பித்து-வாசியையநேரிழுத்துவாங்கிச்-சது ராகக்கும்பகத்திற் பாய்ந்துநன்றுத். தம்பித்தேயிடகலையிற் கும் பித்தக்காற்-சாற்றரியபரப்பிரமசோதிதோன்றும், கும்பித்துவா சியைமேற் கொண்டேழும்பிக்-கோதறநின் றிடிலோர் குருக்கா ணும்பாரோ. (௰௧)

குருவான சதுமுகனுங் கலைமாதுஞ்சீர்க்-கோடிரவி போல நின்றென்கண்ணிற்காண்பா யருவானவஞ்சபையிற் பீடந்தோன் று-மங்கென்றுபூசித்துத்தரிசிப்பாயால்,மருவாகிமலராகிப்பிரகா சிக்கு-மவுனமந்திரமுபதேசித் தருள்செய்வார்காண், கருவானகு ருவையா வரூபங்-கண்டறிவாய் நமயவசிய ரூபரூபந்தானே ()

அருபமாநாததரிசனமுமாச்சு-தரகராபரப்பிரம பூசையா ச்சு,சொருபமாஞ் சங்கையில்லாமவுனமாச்சு-துகளில்சச்சிதான ந்த வுருவுமாச்சு, தருபமாஞ்சாகரத்தி னேர்மையாச்சு - தானென சொரூபத்தின் மூன்றுங்காண்டம், நிருபமாம் பூரகத்தைக் காண லாச்சு-நிகரிலாச்சதகோடி யுகங்கள்காணே. (௰௫)

விஷ்ணுபூசை.

காமேனைநீபூரகத்தைக் கண்டாலே்மோட்சங்-காணுயோசொற் யனத்தின்மூன்றும்பீடம் வாமேணநீமவுனசிவயோகியாகி-வழியா ணசலையையா வங்கென்றான்றி,மாமேணநீகும்பித்துத்தம்பித்தே நன்-மைந்தனேயிரேசகபூரகத்தாலொட்டிச், சேமேணநீயங்கென் றேயொட்டிப்பார்த்தாற் - றெரியுமப்பா விட்டுணுவின்சோதி மாதோ. (௰௪)

சோதியாமவுனகுருசோதியையா- சுடர்கோடி காந்தியிலே வாசிவேகம், நீதியாஞ்சோதியிலே யறிவையோட்டி - நினைவாகப் பார்த்தக்கா லொடுக்கங்காணும்,பாதியாமொடுக்கமதிற்குப் பித்த க்காற்- பளிச்சென்றுவாயிலது திறக்கும்பாரு, சாதுவாய்விட்ணு வோடணங்குகாண்பாய்-சமர்த்தாகவிருவரையும் பூசிப்பாயே()

பூசிப்பாய்கற்பூர தீபவாசம்-பூரணத்தின்மவுனமலர் சோதி சோதி, யாசிப்பாயவர்கடரிசனத்தைக்கண்டா-லப்பனே கேட்ட தெல்லாமருள்வர்பாராய், ஆசரிப்பாய்மவுனகுரு வுபதேசத்தை யையனேயுனக்குய்யும் வகைசொல்வாரால், வாசிப்பா யுபதேச னக்கேசொல்லி-வண்மையுடனீநிற்கும்வகைசொல்வாரே (௰௬

நிறக்குமப்பாவாயிலதுமவுநத்தாலே- நினைவாசவாசிகொண்டு தம்பித்தக்கால், அறிந்து பாரங்கென்றுகுப்பித்தேதா-ணுசுழி யிரேசகபூரகமேசெய்தால், பறக்குமதுசுழுமுனையில் வாயில்கா ணும்-பார்த்தக்காலதின்பெருமைபகரொண்ணாது, சிறக்குமதுசி காரத்தின் வகாரசோதி-சிறப்பானசோதியிலே யறிவாய்நில்லே.

ருத்ரபூசை.

நில்லென்றுற்சும்மாதானிற்கப்போமோ- நேரானசோதியி லேநினைவாய்க்கும்பி, அல்லென்றால்நாகத்தில் ருத்ரன்ருத்ரி-யவ ர்பெருமையிவ்வுலகிலார் தாங்காண்பார், வல்லமையாலவரொளி லைவச்சொல்லப்போமோ-மகத்துவமா மதிகோடி பிரபைகாணு ம், எல்லென்னுமவர்தம்மைமவுனமாக - வென்மகனே பூசிக்கமு த்தியாமே. (௰௮

பூசிப்பாய்வாசிமலரர்ச்சித்தக்காற்-புகழ்பெறவேயுன்றனைக் கண்டுபதேசிப்பார், யாசித்துமவுனகுரு வுபதேசத்தை - யையனேசொல்லுகிறேன் வண்மையாக ஆசரித்துநீகேளு வங்சிங்வங் மங்-கரசராவநாகத்தின் மவுனமாச்சு, பாசமற்றுப்பரமபத சோ திதன்னைப்-பாலகனேபணிந்துநீ பூசிப்பாயே. (௰௯

மயேச்சுரபூசை.

பணிந்திடுவாய்சுழுமுனையின் பூசையாச்சு-பராபரமாம் வி சத்தியின் றன்பூசைகேளு; அணைந்திடுவாய்மயேச்சுரனையத்தா

ந்வராயி- லஸறவரியமயேஸ்வரிதா னோந்தாம்பீடம், அணைத்திடுவா ஊயந்தென்னும்வாயிறன்னை-யரனறிவனங்கென்று வாசிகொண்டு * குணிந்திடுவாய்கும்பித்துத்தம்பித்தக்காற்-கோடான கோடிர விழதிகாண்பாயே. (௨௰)

மதியானமதியையா ரவிதான்கோடி-மகத்தானநாதர் கடம் பரமவாயில், துதியான துதியையா துரியமேரு-துரியமாம்பதவி யதுமவுநவாசி, விதியானமவுனத்தின் வாசிகொண்டு - வினையமா விழுத்துநீகும்பித்தக்கால், அதியானவதீதங்காண் வகாரசோதி- யரகராவங்கென்று கும்பிப்பாயே. (௨௧)

கும்பித்துதம்பித்து மேருபாய்ந்தாற்-குணமானவாயிலது திறக்கும்பாரு, நம்பிக்காண்சொல்லிவிட்டேனங் கென்றுந்தா ன் னிருணவிரோசக பூரகமுஞ்செய்தால். வம்பித்துவாசியது க்கிடமா மைந்தா-வாயுவத்வெழும்புமடா வண்டமட்டும், தம்பித்துவாசி யைநீ தாண்டிப்போனாற்-றவமாயின் மூடாதுதடைக்கட்டாமே

கட்டாமேமவுநத்தாற் கும்பித்தக்காற்- கைலாசங்கொள்ளா துபுகைபோற்கப்பும், அட்டாமேயென்மகனேயண்டரண்ட-ம ங்கென்றுகும்பித்தாலப்பாலோடும், மட்டாமேயிருந்ததினாலாக தென்ன-மவுனம்விட்டான் மாயையிலே மாண்டுபோவாய், தட் டாமற்றம்பனத்தாலொட்டிப்பாரு-தடையறுக்குமவுனத்தாற்று ண்டிடாமே (௨௩)

தாண்டியேமனக்கண்ணாற் பார்க்கும்போது-சதகோடிபிர பையொளிர்சோதிகாணும், மாண்டவொருமயேச்சுரன்றன்கொ லுவிருக்கு-மகத்தானசபைவளர்மெய்ஞ்ஞானவீடு, அண்டியேய வன்றன்னைத் தரிசித்தக்கா-லப்போதே மாயையெல்லா மகன்று போகும், தாண்டியே துரியமலர்கொண்டுபூசி- துரியத்தின்மயே ஸ்வரியைத் தெரிசிப்பாயே. (௨௪)

தெரிசித்துப்பூசித்தாற் கும்பங்காணுந்-தெரியாதமவுனமெ ல்லாந்தெளிந்தேபோகும், அருச்சித்துக்கும்பித்தா லமுதஞ்சிந் துமாங்குதையாவுபதேசமருள்வர்பாராய், பரிசித்துபாலமுதமு ண்டுவார்பார்யாலகனேசொல்லுகிறேன்மவுனவாக்கியம். நாச்சித் துநங்மங்பங்கிங்கென்றேநீ-நலமாகச் செபித்துநின்று தெரிசிப் பாயே. (௨௫)

## சதாசிவபூசை.

நலமாகச்சொன்னேன் மயேச்சுரனுமிக்க-நயமாகமயேஸ் வரியும்பிரகாசிப்பார், வளமாகவிசுத்தியுடைப்பூசையாச்சு-வளரா

* குணிந்திடுவாயென்பது - குணிந்திடுவாயென விகாரப்பட்டது.

ஆதாரத்தாகக் கிளையில்பீடம், அலையாமலாதாரமாறுப்வாயி-லச
க்கிளையிற்சதாசிவத்தின்சத்திபூசை, வளமாகவாசிலையநீயங்கென்
றேதான்-மாட்டாறுதாரத்தில்வாயிருமே. (உகூ)

வாயிலஃதாதாரத்தாறுட்வாயில்-வகையறியாச்சித்தர்களாற்
றிறக்கப்போமோ, ஆயிலாதாரசிதப்பரத்தில் வாயி - லாயிரத்தெ
ட்டிதழதனையார்தான்காண்பார், பாயிலதுபாயுட்வலசபரிவாட்க்
கேளு-பங்கென்றுவாசியைநீதம்பித்தக்கால், பாயுமதுதோன்று
துலைமந்தாசொல்வேன்-பகல்போலெதெரியுமாதாரப்பாரோ ( )

பாரரியவாசியைநீதம்பித்தாக்காற் - பகரொணாவாறுதாரத்
தேயுன்னை, ஆறொன்றேகேட்பார்கள்சபையோராயா -வாக்கினையி
ற்றெரிசனத்தையறியவந்தேன், தேறொன்றுசபையையார்மெய்ஞ்ஞா
னவீட்டிற்-செப்புசரணாதியறவாழ்விப்பார்கள், வாறொன்ற வாசி
கொண்டுகும்பித்தக்கால்-மதிகோடிரவிமதிபோற்சோதிகாணே.

சொதியாமவுனசிவயோகசோதி-சொற்பெரியசோதியிலே
யங்சென்றேறெதில், ஆதியாஞ்சோதிசொலவெளிதோவட்பா-வாதா
ரசோதியிலேயண்டசத்தம், பேதியாதண்டபகிரண்டமட்டும்-
பேசரியசெயபேரிமுழக்கங்காணும், நீதிசேர் நடனசபையோ
லங்காணும்-நிகழ்த்தரியபதினெண்பேர்பூசிப்பாரோ, (உகூ)

பாளையாவகமெனுநற் சுகங்கள்காண்பாய்-பாலகனேயகத்
தீசன்பீடந்தோன்றும், ஆளையாவறிவரகத்தியன்றனேர்மையறி
ந்தவனேமெய்ஞ்ஞானமவுனயோகி, தேளையாசதகோடியோக
ம்பார்த்தேன்-செப்பரியவகமதனிற்றெரிசிப்பாய்சாண்சீர்பெற்
றமவுனகுருவுபதேசித்தார்-செம்மைமிகுகுருபூசையருளினாரோ,

அருளினாற்குருபூசைமவுனபூசை- யையனேவிரோசகபூ ரக
மூஞ்செய்தே, அருளினன்மவுன குருபூசையையா - வகையறிந்
தேன்சுப்பிரமண்ய னுபதேசத்தால், அருளினாற்சத்தசாகரங்களா
ச்சு-தரியசச்சிதானந்தமறியலாச்சுதருளினாலண்டரண்டமேறலா
ச்சு-தலைறவரியவிப்பூசையருளினாச்சே. (ருக)

ஆச்சுதையாவாசிலையநீயிழுத்துவாங்கி - யாதாரவாயில்கடந்
தப்பாலையா, பேச்சப்பாகும்பித்துத்தம்பித்தக்காற்- பேறானப
ளாவாயில்காணும்பாரு, கூச்சையாகமலமலர்கொண்டே நீயுங்கு
மரகுருபாதமலரர்ச்சிப்பாயேல், ஆச்சுதையாவாசியினாற் பூசை
யாச்சு-தரகராதெரிசனத்தைக்காணலாச்சே. (ரு உ)

காணலாமாதாரபூசைசெய்தாற் - காயமதுபெலக்குமதற்
கழிவோவில்லை, மாணலாமாதாரமாறுந்தொல்லை-வையகத்திலார்
செய்வார்மவுனிதீய. வேணவாவற்றசிவயோகஞானி - வேதாந்த

குருச்செய்வார்சித்தர்செய்வார், கோணமிலாவைந்நூற்றின் மது
நபூசை-குறைவறவேமுடிந்ததொருசெய்திகேளே. (௫௩)

கேளையாவெத்தனைசொன்னாலுமெய்யாக்-கேடுகெட்டமா
னிடர்க்குவிவேகமில்லை, ஏளையாவென்னூலின் மறைத்தவெல்லா
மென்மகனேநினைவாக விந்நூல்பாரு, வாளையாவாதார மாறுஞ்
சொன்னேன்-மகத்தானவாசிசிவயோகஞ்சொன்னேன், பாழை
யாய்பாழைவாயிற்பூட்டுச்சொன்னேன்பரிவானமவுனத்திநோட்டம்
பாரே (௫௪)

ஓட்டமாந்துலாராசிசென்மக்கூறோ-டோகோகோபாசத்
திறெனுக்கஞ்சொன்னேன், ஆட்டமாஞ்சிதம்பரத்தி னடனஞ்
சொன்னே-னகத்தினுபதேசமதையடைவாய்ச்சொன்னேன், தா
ட்டிகமாச்சராசரத்தினிலையுஞ்சொன்னேன் - சச்சிதானந்தவொ
ளியறியச்சொன்னேன், ஈட்டமாமாயிரத்தையாய்ந்துபார்த்தே,
யிந்நூலைந்தாங்காண்டமினிதாப்பாரே. (௫௫)

இந்நூற்றைந்நூற்றிற்சூட்சாசூட்ச- மென்னவித்தைசொ
ன்னேனையாவினிமேற்பாரு அந்நூற்றுன்மதிவெண்பா வாதஞ்
சொன்னே -னாரறிவாரலைகடல்சூழவனிமீதில், முந்நூற்றுன்சிவ
த்னவொளியைக்கேளு-மூர்க்கமிலாக்குருநூலைம்பதையும் பாரு
உந்நிலைதானிந்நூலிற்றிறமாங்சொன்னே- னுரைக்கின்றேன் பதி
னெண்பேர்சாபமன்றோ (௫௬)

சாபமதைப்பதினெண்பேர்சித்தர்கூடிச் - சமர்த்தாசவேக
வுப்னிடத்திற்சென்று, பாபமிலாப்பரனருளாற்சாபங்கொண்டு-
பாவித்தேளென்னூறுன்பலித்திடாமற். சாபமென்றுலைந்நூற்றி
ன்மவுநசாபந்-தாமிட்டார்யோகசிவப்பொருள்களெல்லாம், ஆக
வென்றையாயிரத்திலநேகசாபமருளினாதனுலேபலியாதன்றே. 4

## சாபநிவர்த்தி.

பலித்திடவேயேகவுபனிடத்திற்சென்று-பரனருளாற்பரப்
பிரமபாதந்தன்னில், பலித்திடவேபராபரத்தோ டொத்தியானு
ம்-பரமவொளியொத்தவிதம்பண்பாய்க்கேட்டே, அலைக்கலெ
னச்சாபத்தைநிவர்த்திசெய்தே-யாயிரத்திந்நூலிது காணென்று
சொல்ல, முலித்திடவேசாபமதுநிவர்த்தியாச்சு - மூதண்டவுப
தேசமுரைத்தார்பாரே (௫௮)

பாழையாசாபத்தினிவர்த்திகேளு- பாலகனேயித்நூலா னி
வர்த்தியாச்சு, தாழையாவறிவழையாயிரத்தின்சொச்ச - மையனே
யிந்தநூலைந்நூற்ர்தாம், சேழையாசிமநயவசிறிங்உறிங்காச் - செ
யிப்பாய்நீசிங்சியும்ஓம்ஆமென்று, மாழையாமநயவசி மறிங்சி
றிங்கா-மகத்தானகிறிங்சிறிங் மசிநவென்றேதே (௫௯)

ஓதவேபதினெண்பேர்சாபப்போச்சு-தோகோகோசகலசி
த்தர்சாபம்போச்சு,தேதமறலடமவுருநிவர்த்திசெய்தா-லென்ம
கனேசதங்கைகொஞ்சநடனமாடும், போதவேசதகோடிரிஷிகள்
சாபம்-போய்விடையன்றென்மகனேநிவர்த்தியாச்சு, மாறவேம
கத்தானசாபமெல்லா-மாண்டதையா விந்நூலினிவர்த்தியாச்சே

இந்நூல்சித்தி.

மாண்டதேசாபங்கணிவர்த்தியாச்சு-மகத்தானவைந்நூறும்
பலிதமாச்சு, ஆண்டரியவாதாரமாறுஞ்சித்தி- யையனேயாயிரத்
தில்வாதஞ்சித்தி, மாண்டவொருவாதசித்திகமனஞ்சித்தி-வாழலா
ஞ்சிதப்பாத்திற்குளிகைசித்தி, தாண்டுமஃதண்டரண்டபிண்டஞ்
சித்தி-சாற்றரியவட்டகன்மஞ்சித்தியாச்சே. (௪௧)

சித்தியாம்பரிபாடையிதுவேயாகுஞ்-சிவமான வைந்நூறு
மிதுவேயாகும். முத்தியாமுந்நூறுந்தீட்சைசித்தி-மூலமாங்குரு
நூலைம்பதுவுஞ்சித்தி, சத்தியமாமதிவெண்பாநூறுஞ்சித்தி - தனி
ப்பூசைவிதியொரிருநூறுஞ்சித்தி, அத்தியமாமைப்பதற்குண்மு
ப்பூசித்தி-யரகராமுப்பதற்குட்குருவைப்பாரே (௪௨)

நூற்பெருமை.

குருவானநந்தீசர்முந்நூறுஞ்சீர்க்-குணமானபஞ்சகாவிய
முஞ்சித்தி, பரிவாகப்பதினொன்றுஞ்சித்தியாச்சு- பாங்கானகாவி
யத்திின்கருவாம்பீடம். அருவானகாவியத்தாதாரபீட - மாச்சு
தையாயிரத்தொடைந்நூறுஞ்சொச்சம், தூரிசற்றசொச்சமை
யாபூர்வக்கியானஞ்சொன்னேனே ஆயிரத்திருநூறுமால் (௪௩)

சொன்னேனாயிரத்திருநூறதனிலைய-துகளில்வைத்தியத்தை
க்கைபாகத்தோடு, முன்னமுந்நூற்றிற்செந்தூரஞ்சொன்னேன்-
மூர்க்கமறநூற்றிலுயர்பற்பஞ்சொன்னேன், வன்னமுள்ளவாயி
ரத்தைந்நூறுஞ்சொன்னேன் - வசையாணவயித்தியத்தைதவளமா
ச்சொன்னேன், பன்னுகுணவாகடங்கள்பரிவாச்சொன்னேன்-ப
ண்டிதர்நோயாளிகுணமறியச்சொன்னேன் (௪௪)

அறிவரியபதினெண்திற்பாவபுண்ணிய-மாய்ந்துணாத்தேனெ
ன்மகனேயின்னுங்கேளு, செறிதரவீராயிரத் திருநூற்றுக்குட்
சேர்முத்திவயித்தியத்தைமுழுதுப்பாரு, பறிதலிலாச்சகலவகை
யதீதக்கோவை- பார்த்தக்காலிதன்பெருமைபகரொண்ணாதால்,
இறுதலிலாப்பன்னிரண்டிநூற்றிற்சொன்னே-னிந்திரமந்திர
மாஞ்சாலத்தாமே (௪௫)

சாலநவிலைந்நூற்றேடனைத்தினுக்குஞ்சாற்றரியவிந்நூலைநி
கண்டாச்சொன்னேன், பாலபஞ்சபட்சி யைந்நூற்றிற் சொன்
னேனீ-பரிவானசல்லியமோநூறுஞ்சொச்சம். சாலவொருதோ

ட்டியந்தொன்னூற்றிற்சொன்னேனென்சாற்றுமோரெழுபதிலொ
ட்டியத்தைப்பாரு, ஆலமெனுஞ்சாலத்தின் கோவைலையயா-வா
யிரத்தோடைனாம்ப திரைந்தாமே. (௬௫)

ஆமேகாணதன்றொகையையென்னசொல்வே - னதனிலொ
ருமூன்றுலட்சங்காப்பதாகட்,போமேசீர்ப்புலத்தியனே சொல்
லக்கேளு-புகழ்மருவுசாத்திரத்திற்கிலக்கமில்லை, நாமேகாணிவ்வ
ளவும்பார்த்துத்தேறி-நயமாகப்பொருள்படவேயுனக்குச் சொ
ன்னேன், வாமேகாணகத்தியன்வாக்கமுதவாக்கு- மாநிலத்திலார
திவார்மவுனிக்காமே, (௬௭)

வயிரவ பூசை.

ஆமையா நூற்றொகையையறிந்துசொல்ல - வம்புவியிலொ
ருவராலாமோவாகா, ஆமையாவசிமநயவறீம்நறீமென் - றவை
வாகமறீமென்றுமாறுவாய்காண், ஏமையாவெண்கோணம் வள
மாய்க்கீறி-யிடம்வலமாயிரேகையினுற்சூலம்போட்டு,நாமையா
வெட்டெழுத்தைநன்றாய் மாறிநயமாகவயிரவனைப்பூசிப்பாயே(

பூசிப்பாயமுதகும்பம்வைத்துநன்றாய்- புகழ்மருவுமவுநத்
தின்மதனப்பாலும், யாசிப்பாயாயிரத்தெட்டிதழினாலே - யரு
ச்சனைகள்செய்துகற்பூரசோதி, மாசிப்பாய்மவுநசிவஞானத்தா
லே-மந்திரபஞ்சாட்சரத்தாற்றூபதீபம், நேசிப்பாய்வயிரவனை
ப்பூசித்தக்காலேனராகப்பளிச்சென்றுசோதிகாணே. (௬௯)

சுப்பிரமணியதியானம்.

பளிச்சென்றுசோதியெதிர்கண்டதானாற் - பயிரவனுந்தோ
ன்றுவான்பயமோவில்லை, வழிச்செல்லவேணவரமீவானாற்சூர்ப்-
பகைவனைத்தியானஞ்செய்வரமேகேளு, அளிச்சென்றேயவசிவ
நவரவோமென்றே-யழகாகவறுகோணமடைவாய்போடு, செழி
க்கவேயாறெழுத்துநடுவாக்கானுந்-தெளிவாகவிரேகையோராறு
ம்போடே. (௭௰)

பூசை.

போடிரேகையிற்சரவணபவாவென்றே - புகழாகவறுகோ
ணத்துள்ளேவிர்த்து, வீடுமிருத்தம்விரண்டுவாயினுன்றுமிளிர்விர
வாகினுடைப்பீசங்காணும், ஆடையாநால்வாயிற் பீசஞ்சொல்
வேநரீம் ஸ்ரீம் கிரீ மடைவாய்போடு, மூலடையாவோங்கார வட்
டங்கானு-மோகோகோவறுமுகவன்றியானமாச்சே (௭௧)

மவுனபூசை.

தியானமாற்தெரிசனத்தின்பூசைகேளு- திறமானவத்துவை
யாமவுநமலதி, கியானமாமதனப்பான்மதனசோதி- கிருபையுட
ன்மனவுசித்தரர்ச்சிப்பார்பார், தாயாதிதியஞ் சுப்ரமணியன்பூசை

யாச்சு-தான்பிரத்தியட்சமாய்மவுனஞ்சொல்வான், அவாவறுத்தே
மெய்ஞ்ஞானமவுனபூசை-யான்கண்டனிப்பூசைநலமாவின்றே
இப்பூசையார்செய்வார்மவுனிதுன்ப-வின்பமிலாவேதாந்தி
யோகிசெய்வார், இப்பூசைசித்தர் ஞானியர்கள்செய்வா - ரொழிற்
றுலாராசியெடுத் தவர்கள்செய்வார், அப்பூசைதனையான்கண்டின
க்குச்சொன்னே னம்புவியிலெவர்செய்வார் மவுனஞானம், தைப்
பூசைசொன்னேன் மூன்றாங்காண்டத்துத்-தாரணியிலாரறிவாரிந்
நூல்பாரே. (௫௩)

பாரான சித்தரடை-யாளஞ்சொல்வேன் - பரனருளான்மனி
தர்களிலொருவராவார்,தாரான துலாராசி பூர்வஞானந்- தான்றொ
டர்ந்தவனிமிசைத்தோன்றிமேலும் வீரானவிட்டகுறைதொட்ட
நேர்மை,விளங்கவேலபித்தக்காற்சித்தியாகும்,ஆரானபிராணமய
விந்துவாலே-யாச்சுதையாமாயையிலேமனிதர்வாழ்வே. (௫௪)

மனிதராய்ப்பிறந்ததினாலாவதென்ன - மகத்தான துலாராசி ய
றியவேண்டும்,செனித்தககாற்சடமழியா திருக்கவேண்டுஞ்-செட
த்திலுள்ளபொருளெல்லாங்காணவேண்டும்,கனிட்டனுக்காய்மது
பெலக்கவேண்டுங்-கருவிகரணாதிகளைக்காணவேண்டும்,சினத்தொ
ழிந்துதுலாராசி யடுத்தகற்பஞ் - சிவயோகமவுனத்தி லிருந்து
தேறே. (௫௫)

தேறவேசொல்லுகிறேன் மைந்தாகேளு-தெளிவாகவாதார
மாறுங்கண்டு, மாறவேவாசிநிலையொடுக்கங்கண்டு- மவுனசிவயோ
கத்திற்சமாதிகண்டு,வீறவேமெய்ஞ்ஞானதீட்சைகண்டு-மேதக்க
பூருவத்தின் பூசைகண்டு, ஆறவேயண்டரண்ட பிண்டங் கண்டே
யரகராசெகற்குருவை யறிந்துகாணே. (௫௬)

செகற்குருவைக் காணவழி சொல்லக்கேளு- தீமைமிகுபொ
ய்களவுசாமித்துரோகம், வருத்தகொலைசாம்பவஞ்சனைகள்பாவம்
வழுத்தரியவாணவங்களற்றுப்போனால், அகப்பேய்போய்நீநினை
த்தபடியேயாகுமன்றன்றோசமாதிதனிற்கற்பங்கொண்டால் விகி
ர்தகுருமெய்ஞ்ஞானமவுநமாகு-மேலானகற்பமுண்ணக்கருவை
க்கேளே (௫௭)

கேளையாகாயமது வச்சிரமாகுங்-கிருபையுடன் வல்லாரைக்
கற்பங்கொண்டால், ஆளையாமண்டலத்தைச்சாவுபோச்சு-தறைவ
ரியசட்டைதள்ளிப் பூர்வமாச்சு,ஏளையாசிவசத்தி தேகமாச்சு-தெ
ப்போதும்வச்சிர மாயிருக்கும்பாரு, கோளேதுவாராது நான்
சொல்வாக்யங்,கொண்டவப்னே மெஞ்ஞானகுணமுள்ளோனே.

வல்லாரைக்கற்பம்.

குணமுள்ளவல்லாரைக் கற்பஞ்சொல்வேன்-குருவானசத்தி

யுப்புச் சிவத்தினுப்பு, மணமுள்ளபீங்கானிற் போட்டுமைந்தா-மகத்தானசுன்னத்திற்பலந்தான்போடு,அணியுள்ளவைம்மூலமை ங்காயந்தா-மப்பவொர்பஞ்சீகரணதீட்சையுப்பு,நணியுள்ளநான்கையுமே கூட்டிமத்தி-நல்முகவிரவினிற்றண்பனியில்வையே. ()

வையையாவிரவினிற்றண் பனியில்வைக்க- மகத்தானசெயநீரு மாகுமாகும், கையையாவதிற்பட்டாலற்றுப்போகும்-கத்தூரிவன்னம்போலிருக்கும்பாரு,செய்யையாசீசாவிற்பதனம்பண்ணிச்-செயமானசெயநீரு முறைதப்பாது, ஐயையாகுருச்சுன்னம்விராகன்கொண்டே யச்செயநீர்சரி யெடையாக் கூட்டிக்கொள்ளே. (கூ௰)

வாலை பூசை.

கொள்ளையாவிரண்டணையும் பீங்கான்றன்னிற் - குணமாகச் சொன்னபடி கொஞ்சம்போடு,நள்ளையாரவிதனிலேநிமிடம்வைத்தா-னுதாந்தவிலேகியம்போலிருக்கும்பாரு, பள்ளையாவகிமைநிறை குருவின்பாகம்-பதமாகவெடுத்துநீதேவிபூசை,வள்ளையாவாலையெனும் வாமப்பெண்ணை-மனதாரநினைத்துநீதியானிப்பாயே

தியானித்தாயாகின்மெல்ஞ்ஞானந்தோன்றுந்-திருவுடையவாலைப்பெண் ணெதிரோநிற்பாள், தயாபரியாமளைகௌரி-சூலிசீலிசாம்பவியந்தரிபஞ்சாட்சரிகௌமாரி,உயர்வுறவேவல்லாரைக்கற்பமெற்கின்-றுன்னு பொருடருமாறு வரமீவாய்காண், கியானத்தோடிருந்துலகிற்சீவித்தம்ம- கேடில்சிவானந்தமுறக்கடாட்சிப்பாயே. (கூஉ)

ஆவென்றசத்தமதுகேட்டதானு-லப்பொழுதே யேனென்றுவருவாள்பாரு,ஆவென்றசத்தத்தானீயாரென்பா-எப்பனேயகத்தியன்றன் சீடனென்பாய், ஓவென்றேசத்தமிட்டு முத்தமிட்டேயொண்மைமுகமலர்ந்துபதேசஞ்செய்தாள்வாள், நாவென்றசற்குருவை நாவாரத்தா-னுதர்ந்தசிரோமணிமைப்பூசிப்பாயே (கூரு

பூசிப்பாய்சமாதிதனில் யோகத்துற்றுப் - புகலிலே லேகியமோர்பண வெடைதான் கொண்டால், மூசிப்பாய் லகிரியையானென்னசொல்வேன் - மொழியவரிதைந்துநா ளளவும்போதை, யாசிப்பாயண்டரண்டவாசிகொண்டே-யங்கென்றுகும்பித்தாலுயரத்தூக்கும்,மாசறவேமலசலந்தாந்திரண்டுபோகு-மைந்தனேவித்துவையுங் கட்டும்பாரோ. (கூச)

பாரையாமண்டலந்தான்கொண்டாயானுற் - பாலகனேபசிபோகு மதனமாகும்,பாரையாவாசியோ வொடுங்கிப்போகும் பகரரியபனைவாயிலடைக்குமாங்கே, ஆரையாவறுசுவை யுண்டியில்வெறுப்பா-மாதாரமாறுமன்றேசித்தியாகும்,தேரையா வல்லாரை வருடங்கொண்டால் - சீராகவுதன்பெருமை செப்பக்கேளே.

கேளாய்நீயென்னசொல்வேன் பூர்வஞான-கேசரத்தின்மே
லறைதான் றிறக்கும்பாரு,மாளாய்நீமண்டலத்துக்கொவ்வோர்ச
ட்டை-மைந்தனே யுரியுமந்தக் கற்பத்தாலே,வாளாநீமதனப்பா
றினங்கொண்டேபார்-வண்பசுவின்பாலேதான்மயங்க வேண்டா
ம், கோளிறெண்ணூற்றுறுசட்டை தள்ளுமெய்யாக் - கூறுதொ
கையாயிரமா முருவங்காணே. (௬௬)

காணப்பாதேகத்திற் சூடுகொண்டாற்-கண்மணியே கண்ட
வுடனயச்செந்தூரம்,மாணச்செந்தூரமெடை பணமாக்கொண்
டு-மைந்தனேசெந்தேனிலடைவாயுட்கொள் , நாணிப்போஞ்ச
டத்திலுள்ள நோய்களெல்லா - நவிலரியசெயகற்ப மகிமையா
லே, வீணப்பாவலையாதேயாருஞ்சொல்லார்-வெளியாகச்சொல்
லிவிட்டே னுண்மைதேறே (௬௭)

தேறியந்தவல்லாரைக்குருகற்பத்தைச் சீராகமுறையறிந்து
செய்வாயானால்,வீறியைந்தபயன்பயக்கும்ப ரத்திறனைமெய்ம்
மையாச் சொன்னேனையா குருவினாணை, மாறிலிந்த முறையத
னைச்செய்துபார்த்தேன்-மாசற்றகுருவழியிற் பலிக்குங் கண்டா
ய், ஆறறிவார்கைபாகஞ் செய்பாகந்தா -னறிந்துசெய வின்னு
மொ ரு நூல்பாராதே. (௬௮

இன்னுமொருசெய்திதனைச்சொல்லக்கேளு-வெழிலானகற்
பத்தையுண்ணும்போது, பன்னுகின்ற காற்றுவெயிலாகாவோட்
டம்-படர்நடைசத்தித்தலிவை யாகாபொய்ம்மை , துன்னுமொ
ழிகொலைகளவு மாகாவெண்ணெய்-சுண்ணம்புகடுகுபுளியுள்ளியா
கா,தன்னிநிகர்கொம்மைமுலை மடவார்தங்கட் -சையோகமதனை
யுநீ தள்ளுவாயே (௬௯)

தள்ளையாகள்ளுசெஞ்சாவினறச்சிமச்சந்-தன்னோடுபுலைகயி
லையு முப்புந்தள்ளு,மெள்ளவேகடுங்கோப மதனைத்தள்ளு - விரி
கடல்சூழ்புவிவாழ்வை யொருங்கேதள்ளு,கொள்ளையாவிடயவா
சனையிற்செல்லுங்-குணமில்லாமனப்பேயையதிற்செல்லாதோர்
விள்ளரியவேகாந்தத் திருக்கின்மாயை-வெருண்டோடும்பூரணத்
தினமுதமுண்ணே, (௭௰)

## யோகநித்திரை.

அமுதமிழியோகமது செய்யவென்னி - லப்பனே கானீட்
டிப் படுத்துக்கொண்டு, மமதையிலாதிடக்கையை முடி மேல்வை
த்து-வழுத்துபுரணத்தொர்சுழு முனையைமேவி, சமரசமாவாசி
யைநீ யிழுத்துக்கொண்டு-சமர்த்தாகக்கேசரத்தின் மனதைவைத்
தே,அமைதியொடு பராபரத்தைத் தரிசித்தேதா - னையனேநிலா
டத்திற் றூங்குவாயே, (௭௧)

தூங்குவாயிம்முறையே தூங்குவாயேற்- றுவாதசாந்தத்தன்
றேசிறந்தேயாடும்,வாங்கவென்றுன்மாநிலத்தின் மனிதனாயா
வகையதனைத்தெரியாமன்மாண்டோர்கோடி, வாங்குதிரைக்கடற்
புவியின் மனிதனொன்று-மாளாமலிருக்கவன்றே சொன்னேன்பா
ரு,எங்கிநின்றலையாம விருந்துமைந்தா- வென்றனைப்போர்கோ
டியுக மிருந்துதேறே, (எஉ)

பத்தியம்,

தேறவென்றார்கற்பத்தைச்சீராக்கொள்ளு- தியங்காதேயின்
னுமொருசெப்திகேளு, பாறவென்றார்பத்தியம் பத்திரமாப்ப
ண்ணு-பழியில்திரிகடுகுதிரிபலாதியோமம், வீறுபெறுசீரகமொ
ண்கிராம்புபத்திரி-சீர்க்சாதிக்காய்நல்புளியாரையோடு, நாறுசிறு
கீரைசிறுபயறோடையா-நலமாகக்கட்டியதோருப்புமாமே.(எங

வெண்சாணைக்கற்பம்,

ஆருமேநற்கொறுக்கைப் புளிமற்றறைய -வறைவரியகற்பூர
சிலையிற்சுன்னம் வாகானவண்டக்கல் லின்றன்சுன்ன - மகத்தான
கன்னாதங்கச்சுன்னம், சேகாகுமொருபொழு தேயன்னங்கொ
ண்டாற்-றேகமதுசட்டைதள்ளித்திகழுப்பாரு,பாகமாவெண்சா
ணைக்கற்பஞ்சொன்னேன்-பகரரியசித்தர்கட்குக்குருவிதாச்சே,(எச)

ஆச்சப்பாவின்னுமொருகற்பஞ்சொல்வே - னண்டபகிர
ண்டமதையிடித்துக்கொண்டு,சூச்சமில்லாதிடித்ததிலே தண்ணீர்
விட்டுக்-குறைவரவேபிழிசாறு நாழிகொண்டு, ஆச்சியமோர்படி
கூடவிட்டுப்பின்ன-ரடுப்பேற்றியதனையோர்சாமமட்டும், காச்ச
ப்பாமெழுகுபதமாகும்போது- கனிவாசக்குருசெயநீர்ப்பாகங்
கேளே, (எரு)

காயாதிகற்பம்,

கேளபாவதையாற்றியெடுத்துப்பாரு-கேசரத்தின்காயாதி
கற்பமாகும்,கோளொன்றும்வாராதுகுருவைப்போற்றிக் - குரு
செயநீரொருபலந்தா னதனில்விட்டு, வாளிரவிதனிச்சாமங்காய
வைக்கின்-வண்மைசேர்மெழுகுபதமாகுங்கண்டாய்,தானுறவிம்
முறையதனைமுடித்தேயேகாட் - சரமதனுற்றியானித்துப்பூசை
செய்யே. (எசு)

மேன்மூலசுத்தி,

செய்யப்பாபராபரத்தைத்தியானபூசை-செய்துநீமுடித்த
பின்புசெப்பக்கேளு:ஐயனேசூரியோதயத்திலேதா- னடைவாக
கப்பெருவிரலிற்றடவிக்கொண்டு, உப்பையயாவுன்னுக்கிற் புரள
வேற்றி-யும்மென்றுவாசிலையநீகுப்பித்தக்கால், கைப்பாகவியன்ற
கபமொருங்கேயெல்லாங்கழன்றுவிடுமின்னுமொருசுத்திகேளே

### கீழ்மூலசுத்தி.

சுத்திசெயமூலத்தின் கற்பஞ்சொல்வேன் - றுகளிலாக்கற்ப
மது சூட்சாசூட்சம்,பத்திமையாச் செய்யவொருசெங்கற்றூழை
ப்-பகரறியசோற்றேடே குருவைச்சேர்த்தே, அத்தையொருசீ
லையிலேமுடிந்துகொண்டே-யடைவாகப்பிழிந்தக்காலிழியுஞ்சா
று,சித்திதருங்குருசெயநீர் கூடவிட்டுத்-தீயேற்றியோர்சாமமெ
ரித்திடாயே. (௭௮)

எரித்திடுவாய்மெழுகுபதமாகுமப்போ-திறக்கிவைத்தென்
மகனேயின்னுங்கேளு,புறையற்றசுத்தசல மதனில் வார்த்துப்-பு
லத்தியனேயிரவிதனிற் காயவைக்கின் அரக்கதுபோற் செம்மைநி
றமாகுமையா-வையமதைச்சுத்திசெய் யிதைப்போலுண்டோ,
பருத்ததனமுடையமுலைமகளிட்பூசை- பண்ணுசெயநீர்மகிமை
யறையக்கேளே. (௭௯)

அறையக்கேளென்னிடத்தன்புள்ளசீட - வநாமிவிரலதினு
லேதோய்த்துக்கொண்டு,பறியுமப்பூழ வுண்ணுக்கிற்புரளத்தேய்க்
கிற் - பாழானகபமெல்லாங்கழன்றேம்பாகும், முறைப்படிசெய்
மூலத்தின்கற்பத்தாலே-முடிந்ததோர்காயசுத்தி யாகுங்காணே,
மறப்பிலாதடிமூலஞ்சுத்தியாக - மைந்தனேயந்திசந்தி நாட்டம்
பாரே, (௮௰)

நாட்டமையாகண்ணோட்டம்பார்த்தாயானால் - நலமானசு
ழுமுனையில்வாயில்காணும், அட்டமையாவவ்வாயிறிறக்கும்பாரு
வமுதகெங்கையாங்கிருந் தடைவாய்ப்பாயும்,வாட்டமையாவமு
தமதைக்கொண்டாயானால்-வாழலாங்கோடான கோடிகாலம்,பா
ட்டமையாபாவிகட்குச்சொல்லவில்லை -பாலகனேயுன்றனுக்குப்
பாவித்தேனே. (௮௧)

பாவித்தேனின்னமொருகருவைக்கேளு-பற்பினியினண்ட
மையாவைஞ்சாம்வைப்பூ ஆவித்துமறிவீர்களண்டக்கூறோ-டை
யிரண்டுபத்துடனேஐஞ்சுங்கூட்டி, வாவித்துப் பதினைஞ்சுமெ
டுத்துக்கொண்டு- வளமாகக்கல்லுரலிலுலக்கைநாட்டி, ஏவித்தே
யிருப்புலக்கையதனாலயா-விடித்திடுவாயிருசாமமின்னுங்கேளே

கேளையாவென்மகனேயறியச்சொல்வேன் - கெவுனமென்ற
ரசகெவுனக்குளிகையையா,ஆளையாவத்தனையுமாவதாக்கி - யைய
னேசுத்தசலந்தன்னிலிட்டு,காளையாவலக்கையாற்கலக்கிமைந்தா-
கண்மணியேதெளியவைப்பாய்சாமமட்டும்,பாளையாபலிதமாங்
கெவுனவித்தை-பாலகனேபரிட்சைதனையின்னுங்கேளே, (௮௩)

### இரசக்குளிகை,

இன்னங்களினமறிந்து சொல்வேனையா-வெடுத்தமுறைதப்
பாதுகுருவின்வாக்கே, அன்னங்கேளடிமூலப் பழக்கத்தாலே -

யையனேகல்வத்திற்புளியைப்போட்டே,இன்னங்கேள்சொன்ன குருசெயநீர்விட்டே - யெழிலாகவிருசாமமெழுகாவாட்டி,அன் னங்கேளண்டமதினிதானமாக - வப்பனேகெவுனத்திற்குளிகை பாரே. (௮௪)

பாரப்பாகுகையெடுத்துரவியில்வைப்பாய்-பாலகனேபன் னிரண்டு சாமங்காய்ந்தால்,வேரப்பாகுகையெடுத்துக்கையாற்ற ட்ட-வெண்கலத்தின்சத்தமையா வென்னசொல்வேன், ஆரப்பா வறிவார்க ளண்டவித்தை-யாடலாமிந்தவித்தை யநேகங்கோடி, சீரப்பாமுன்சொன்ன தெளிவைக்கொண்டு- திறமாகத் தீயெரிப் பாய் சாமந்தானே, (௮௫)

காயாதிசுன்னம்,

சாமமட்டுமிக்குருவைக்காயவைத்துச்-சமர்த்தானகேசரத் திற்றீயைப்போட்டுகாமேவுகறுப்புவன்னம்போலேகாணுங்-கரு க்குருவாஞ்சுன்னமதிற்பல[illegible]தான்போட்டே, ஆமென்றபற்பமி ணிமுதல்வைபிண்ட-மைய[illegible]யிக்கருவிலண்டம்போகிட், டோ மென்றேயோர்கொதிதான் கொதித்ததானு-லோகோகோவிறக்கி வைத்தெடுத்திடாயே, (௮௬)

எடுத்தப்பாரண்டமதுசிவந்துகாணு- மென்மகனேகுருசெ யநீரதனிற்போகிட்,டுடுத்துப்பாரோர்சாம மாறவிட்டே- யூமை யென்றகுகைதனிலேயண்டம்வைத்தே, அடுத்துப்பார் மெழுகி னுற்றந்துமூடி-யையனேகெசபுடத்திலடை வாப்போடு,மடித்து ப்பார்மகத்தானபுடத்தினீறு-மைந்தனேகாயாதிசுன்னந்தானே.

தானுனகாயமஃதாதியாது -தருவானசுன்னங் கேசரத்தின்சு ன்னம்,கானுனகடையில்விற்குஞ்சரக்கெல்லந்தான் - கட்டுமையா விச்சுன்னக்குருவினுலே, மீனுனசுன்னமதைப்பதனம்பண்ணு- வேதாந்தசுந்தரமேயின்னுங்கேளு,ஆனுனமம்பிகையாம் வாலைப் பெண்ணை-யர்ச்சித்துப்பூசித்துத்தெரிசிப்பாயே. (௮௮)

தெரிசிப்பாய்தேனமுதஞ்சொரியுமாதைத் -தேவர்முனிவ ர்துதிசெய்தேத்துமாதை, அருசிப்பாயண்டசராசரத்திற்சுன்ன- மாச்சுதையாவின்னுமொருகருவைக்கேளு, பரிசிப்பாய்பராபர த்தின்முப்பூச்சுன்னம்,பரிவானசுன்னங்காயாதிசுன்னம், முரிசிப் பாய்முச்சுன்னம் பலத்தான்கொண்டு- முன்சொன்ன மூதண்ட தயிலங்கேளே (௮௯)

கருத்தயிலம்,

கேளேநீயைஞ்சுவைப்புத் திங்களொன்று - கேசரத்தின்பச் சோந்தி பச்சைப்பாம்பு;ஆளேநீஞெண்டோடுபச்சைநாபி-யன் பாகவாந்தைக்கண் கோட்டான்பிச்சு, தேளேநீதேவாங்குக் கண்

னும்பிச்சுந்-தேசியுடையிரத்தமப்பாபிச்சுமாகும், மாளேநீமட்டவளேப்பிச்சுங்கண்ணு-மகத்தானதேஸாஸயயாபச்சையாமே.()

ஆஸமயாசெய்யானுமெய்யாம்வித்தை - யருநட்டுவக்காவிகுழிவேழத்தோ, டேமையாவிப்புலிக் கருநாய்மண்ஸட -யியம்புஞ்செவ்வாலரணே யுடும்பின்பிச்சு,காமையாகரும்பூனைக் கண்ணிஞேடு-கருவானஞெண்டோடு கபாலவோடு, வேமையாவழிமறித்தான் பிச்சுங்கண்ணும்-வேதாந்தவிச்சுளியின் பிச்சுமாமே. (௬௧)

ஆமென்றசெந்தேளுங் கருந்தேளாமை-யைய செங்குளவிகருங்குளவியோடு, தேமேவுகருங்குளவிகன்ஞெண்டோடு-தெளிவான சுழல்வண்டு கருவண்டோடு,மாமேவுபுனுகோடுபிள்ளேப்பூச்சி-மகத்தானநாகத்தின்விடம்பிச்சோடே,ஏமென்றவிந்திரகோபத்தோடைய-வேறுதொகைமுப்பத்திரண்டாமன்றே. (௬௨)

ஆமேகாண்சுந்தரமேயின்னுங்கேளு - ஸவயனேயழிஞ்சிவிளா நாழியப்பா, மாமேவுமதனப்பூமத்தப்வித்து-மகத்தானமருப்பியாளேவுணங்கிவேரும்,காமேவுகாஞ்சொறியின்வேருங்கூட்டி, கண்மணியே சஞ்சாவின் வித்துங்கூட்டி, வேமேதான்வெண்குன்றிக்கருங்குன்றிக்கு-விளங்கியவோர்பருப்பாகுமின்னுங்கேளே.()

கேளேயாசாதிக்காய்சாதிபத்திரி- கேடிலிலவங்கப்பூலவங்கப்பட்டை,கோளறுசீர்க் கஸ்தூரிமஞ்சள்யாருங்-கூறறியமுறையப்பாபதினஞ்சாகும்,ஏலம்வயிவையனைத்தும்ரவியிற்காயி- னென்மகனேமெத்தநன் றினிமேற்கேளு, கோளேயாவலிய கல்லுரலிற்போட்டுக்-குற்றுவாயிருப்புலக்கையதனுற்றுனே. (௬௪)

தானென்றவிருப்புலக்கைகொண்டுகுற்றச் - சாற்றரியகுருசெயநீ ரதனில்விட்டுக்,கானுனவைம்மூலங்கூடச்சேர்த்துக்- கனிவாகவிஞ்சுளியைப்பண்பாய்ச்சேரு, தேனுன சஞ்சரியாய்க்கருவாய்க்குற்று-தேற்றமிகவேண்டுமென்றுதாயைப்போற்றிக், கோனுனபிசின்போலேவரும்பாரன்பாப்- பேய்மகனேயஸேயாதேயின்னுங்கேளே. (௬௫)

இன்னுமையாசொல்லுகிறேன் கனிவாக்கேளு-வியம்பரியசாலமென்னூற்றுறுகோஸவ, அன்னமையா விஸவக்கெல்லாஞ்சித்துவித்தை-யாடலாமித்தயிலத் தநேகம்வித்தை,கன்னமையாகலியுகத்துச்சித்தைவித்தை - கண்மூடிவிழிக்குமுன்னேயநேகம்வித்தை,இன்னும்வெகுவித்தையையாவினேதவித்தை - யென்னசொல்வேனட்டகன்மவித்தையாமே. (௬௬)

ஆமேதானறுபத்துநான்குசித்து-மாடலாமித்தயிலத்தாலேபாரு,சாமேமுன்சொன்னவைஞ் சாநிதங்கள் - சாற்றரியதயிலத்

திற் பிசறிப்போட்டு,வாமேவுகம்பதினூற்சுழற்றுவாய்நீ - மகத்தானபிசினெல்லாந்தயிலமாகும்,கோமேவுகுழிவெட்டிக்கலசம்வைத்துக்-குழித்தயிலமிறக்கிடுவாய்குணமாத்தானே. (கூஎ)

தானென்றேவொருமுழமாக் குழிதான்வெட்டித்-தகைமைபெறுபுதுக்கலசம்புதைத்திடாய்நீ, பானென்றகருத்தயிலப் பாண்டந்தன்னைப்-பாலகனேகலசத்தின் மேலேவைப்பாய், ஆனென்றபாண்டத்தூத்துவாரமிட்டே-யாரணியிலிட்டவெருமுட்டைகொண்டே, ஏனென்றுநீயெரிப்பாய் மூட்டையாலே - யிறங்குமையாகலசத்திற்றயிலந்தானே. (கூஅ)

இறங்குகின்றதயிலத்தை யெடுத்துப்பாரு - வென்னசொல்வேனதினுடையவன்னமையா,கறங்குகின்றவன்னந்தான் கறுப்பதாகுங்-கண்மணியேசீசாவிற்பதனம்பண்ணு,நிறம்புகின்றசவ்வாதுபுனுகுவாச,நிகழ்த்தரியகஸ்தூரிமூன்றின்வாசம், பிறங்குகின்றவாசமதைப்புகட்டிநீயும்-பேசரியவாலையைநீபூசைபண்ணே. ()

பண்ணையார்வெண்ணூறுசாலவித்தை- பலிதமையாவித்தனையுந் தொட்டேயாடாய், அண்ணையாவாறிரண்டு நூறுசால-மையனே யித்தயிலங்கொண்டேநன்று,மண்ணையா யிரவிலக்கப்பெருநூல்பீட - மகத்தானவித்தயிலந் தொட்டேயாடு, விண்ணையாவிநோதவகையிருநூறுமால் - விவேகமுள்ளபாலகனேயாடுவாயே.

ஆடுவார்கத்தியன்மூன் சொன்னவாக்ய-மையனேயித்தயிலப்பெருமைதன்னைப்,பாடுவார்பதினெண்பேர் நூல்கடோறும்-பாலகனேயித்தயிலங்கொண்டுசாடு, சாடுவாய்சகலசித்தர் நூல்கட்கெல்லாஞ்-சற்குருவாமிந்நூலைந் நூறுமாமற்,நீடுபடவெந்நூலுமிந்நூலொவ்வா - விந்நூன்மூன்றுங்காண்டம்பூர்ணமென்றே. ()

மூன்றுங்காண்டம்-முற்றிற்று.

ஆ காண்டம் - ௩௱ - விருத்தம் - ௩௱க.



# நாலாங்காண்டம்.



பூரணமாம்பரிபாடைநாலாங்காண்டம்-புகழ்பெரியமணிமலைநற்றவஞ்செய்தீன்றவாரணமாங்கொம்மைமுலைமங்கையற்குவழுத்தினளன்புடனேயானுமாதி,காரணமாங்கருக்களெல்லாங் கண்டுதேறிக்-கருக்குருவிந்நூற்கவியைந்நூறுமைய,சீரணமாப்போகாமற்சித்தர்கட்குச்-செப்பினேனிதற்குச்செவ்வேள்காப்பாமே. ()

செயமாகச்சொல்லிவைத்தே னிரண்டாங்காண்டஞ்-சீராக முப்பூவின் கருவுங்காணும், வயமாகமறைத்தகருக்குருவுந்தோன்றும் - வசனித்தேனஞ்சாங்காண் டம்மறைப்பாச், சுயமாகவுதகமஃதப்பேயாகுந்- துகளறுசீர்த்தீட்சைவிதியைஞ்சாங்காண்டம் நயமானசரக்கினது குணக்கூறெல்லா-நானறிந்தபடிசொன்னே னலமாத்தானே, (௨)

தானென்றவகைபாகஞ் செய்பாகந்தான் - றப்பி தங்களில்லா மலேஞ்சாங்காண்டம், வாமனென்றபூவெடுக்குந் தீட்சைமார்க்கம்- வகைதெரியாமூடருக்குத் தெரியச்சொன்னேன், தேனதனைப் பொழிந்தாற்போற் கருக்களெல்லாந் - திறமானமுக்கருவா மண்டக்கூறே, யானென்றுகைகாட்டு மைஞ்சாங்காண்ட - மாதவினுற் சோதியிலே யடங்குவாயே. (௩)

நாதவிந்து - அண்டபிண்டம்.

வாரானவகாரமது விந்துவாச்சு - வகையானவுகாரமதுநாதமாச்சு, பேரானவொகாரமது பிண்டமாச்சு - பேரொளியாம் பராபரத்தி லெடுத்தகூறு, ஊரானசிவசெந்து பரத்தின்கூறு- வுதித்து நின்றநாதவிந்து சத்திகூறு, ஆரானபிண்டவிந் தண்டக்கூறு - வாச்சுதுபார்மூன்றுமேலே யைந்நூறுச்சே. (௪)

ஆச்சுதுபாரகாரமுகாரம்பிரண்டு மறைவரியவொகாரமொடு மூன்றேமூலம், பேச்சிதுபார்பேசாத மூலமாச்சு-பேரானஆமையென்ற வுயிருமாச்சு, காச்சுதுபார்கருக்குருவாம் பிண்டமாச்சு-கருவுக்குளமுதமென்ற சலந்தானுச்சு, வாய்ச்சுதுபா ரமுதமென்ற பனிநீராச்சு-மகத்தான சுத்தசல மதற்குப்பேரே. (௫)

அதிகநலரசமதுதான் விந்துவாச்சு - தரைவரியநாதங்காறலையுமாச்சுபதியானவதுவதுவாம்விந்துமாச்சுபரம்பொருளேயிஃதையா வமுதகங்கை, அதுவானவிதுவதுவாந்தேசிநீரு- மதிலுதித்தவமுரியது சுத்ததீர்த்தம், அதுவானபதியதுதான் சோதியாதி யதையறியவேண்டினைந்தாங் காண்டம்பாரே. (௬)

பாரோதுசீரோதுபதிதானேது - பருதியென்ற ரவிமதியுங்கூடுநாளிற், சீரோதுநீர்தானே துருவமேது-செய்ததவப் பயனதினுற்சென்மக்கூறும், ஆரோதுவரமேதுசுகிர்தமேதா- லறிவரியகருவியினுல் வளப்பக்கூறு, காரோதோவேரோது புளிதானையா- கடைந்தெடுத்ததிருவாணி யாணியாமே. (௭)

ஐம்மூலம்-ஐங்காயம்.

ஆணியென்றுலாணியது வாளைக்கொண்டே - யறுக்கலாமதின்கசிவைமனதினுலே, ஏணியென்றுலேணி யஃதேறேறப்ப-வெ

ழிற்குவங்கிருந்தாரோ துருவங்கண்டு, பாணியென்றாற் பாணியினு லூன்றிக்கொண்டு-பராபரமா மைம்மூலமைஞ்சுகாயம், வேணி யென்றால்வேணியன்றோதுங்கவேணி-வேதாந்தமதனில் விளையா டுவாரோ. (அ)

ஆடுவார்யமுனையென்றவமுததீர்த்த - மண்டபத்திலகண்டம துசுத்ததீர்த்தம், பாடுவார்சலமதனிற் கங்கையாடிப் - பரபூசை குருபூசை செய்தேநிற்பார், நாடுவார்நாதாந்த சத்திகொண்டு-ந ல்லபனிநீராயன்றோ தெளியவைப்பார், தேடுவாரில்லையதையறி விறைலே-தெளிவானவுப்பெடுத்து முப்பூவாக்கே. (கூ)

கல்லுப்பு.

முப்பூவாமுப்பதனிற்றப்போவில்லை-முக்கருவாமக்கருவை க்கண்டுதேறு, சப்பானசப்பதுவுங் கசிவுபோக்கிச்-சாரணைக்குட் கெவுனமதாக் குப்பிக்கேற்றி அப்பான கொப்பதுபொன்மணிக ளாக்கி-யம்புசரந்தொடுத்தாற்போ ளுணியேற்றி,ஒப்பான கப்ப ணாகொண்டடுப்பிலேற்றி, யோர்பத்துச்சாரவத்தி யுப்பதாச்சே.

ஆச்சுதேயாகாசவுப்பதாச்சு-தறிவாலேயவனாவெல்லயாரா லாகும், தோச்சுதேதொடுத்ததுவும் படுத்துப்போச்சு - துரிய மென்றவுருவமது திரும்பதாச்சு,தூச்சுதேதிரும்பதுவந் தூண தாச்சு-தொடுத்தசரமண்டலந்தா னேறலாச்சு,காச்சுதே கருவாகி யுருவுமாகிக்-காய்கனியாயுற்பவித்த கல்லுப்பாச்சே. (யக)

கல்லானகல்லதுவும் வெல்லமாட்டார் - கருவானவுருவதுவு ஞ்சொல்லமாட்டார், வில்லானவில்லதுவே தொடுக்கமாட்டார்- விற்பிடிக்குஞ் சாயலதைக் காட்டமாட்டார், இல்லானவில்லதுவு நல்லவீடே-யில்லமென்ற சொல்லதுவே நிறுத்தமாட்டார், அல் லானபுல்லதுவேயண்டநீரா-மப்பூவிலப்பனிநீரடைவுகேளே. ()

அடைவானடைவதுவா மண்டந்தானு - மதிலிருந்துவிந்து வைநீயெடுத்துக்கொண்டு, கடையானசத்திருவாமந்நீரோடு-கரு வானவோட்டினுடைச் சவ்வுபோக்கி - நடையான நாதமதைக் கூடச்சேர்த்து - நாட்டுவாய்கல்லுரலினுட்டக்கேளு;அடைவான வச்சிரமா மூலக்கைகொண்டே யண்டத்தின்மேலோட்டைவலுக் கக்குத்தே. (யரு)

குத்துவாயிருப்புலக்கை யதனைக்கொண்டு- குமுறவேயிடித் ததனைத்தூளதாக்கி, அத்துவாய்மாச்சேரக்குத்துக்குத்தே-யதினு டையவீரமெல்லாம் போகக்குத்து, தத்துவாய்தங்க மென்றமா வெடுத்துத்- தாயானமயேஸ்வரியைப் பூசைபண்ணு, வத்துவா மாதாவே நாதரூபி-மாதேவியென்றெண்ணிவாழ்த்துவாயே. ()

எண்ணவேபூருவத்தி லமுதவாழ்வே - யெங்கள்குலம்விளங் கவந்த மங்கைப்பெண்ணே, கண்ணவேசொரூபவண்ட வரூப்ப

யெண்ணே- கருவதனி லுருவுதித்த கன்னிப்பெண்ணே, அண்ண வேயமுதத்தில் வாழும்பெண்ணே-யண்டத்திற்குடியிருக்குமாதி ப்பெண்ணே,சொன்னமொழிதவமுதசொந்தப்பெண்ணே-சொ ற்பெரியவகத்தியன்றன்வாழ்வேயம்மே. (யரு)

வாழவேவேண்டுமென்றுஷயவிந்த-மாவதனிற்பணவெடை தானெடுத்துக்கொண்டே, ஆழவேயாதிவிந் தமுதந்தன்னி - லைய னேயிக்கருவை யடைவாப்போடு, காழவேசலம்போலேயிருந்த விந்து-கன்னியாநாதவிந்து கலந்ததானுல், சாழவேசலநிதியாஞ் சமுத்ரதீர்த்தஞ்-சங்கையிலாப்பாலமுதத் தெளிவதாச்சே. (யசா)

சுத்தசலம்.

தெளிவானபாலமுதம்பனிநீராச்சு-தெவிட்டாதசுத்தசல மி துவேயாச்சு, அளியானவாமுச்சு பாலாமுச்சு-தாயிரத்தெட்டண் டமட்டும்பாயலாச்சு-குளியானதெளிவாச்சு தறிவுமாச்சு-கோடா னகோடிசித்த ரதீதமாச்சு, வளியான வளியாச்சுபாறையாச்சு-ம கத்தானதேசிநீ ரென்றும்பேரோ (யஎ)

தேசிநீர்-ஊசிநீர்.

பேரானதேசிநீர்குருவைக்கொண்டு-பேருகத்தெளியவைத் தவூசிநீர்தான், ஊரானவூசிநீர் மூன்றுஞ்சுத்தி-யுடன்சேர்ந்தகாசி நீர் கருவைக்கேளு, காரானகருவதுதான் காசிநீரோ-காசியென்ற சலநிதியாம்யமுனைதீர்த்தம், தூரான துங்கபத்திரிவிருத்தகங்கை- துவருமென்றசரஸ்வதியின் தீர்த்தமாமே. (யஅ)

தீர்த்தமாமுயர் துங்கவேணிவாணி-திறமானநர்ம்மதையாந் தூயகன்னி, ஆர்த்தமாம்பற்பநதி யென்றும்பேர்மற்-றறைவரிய குமரியென்றுமிதற்குப்பேர்சீர், * சார்த்தவெண்சங்கநதி யென் றும்பேராஞ்-சாற்றுசரவணப்பொய்கை யென்றும்பேராம் ஆர் த்தமா மறுமூன்றுங் கூட்டினக்கா - லமுதமெனுஞ் சலநிதிசீர்ச் சத்தியாச்சே. (யகூ)

ஆச்சுதுபா ரமுதமென்றவமுரிதன்னு- லடைவாகமுன்சொ ன்னபாவைதோன்றும், பாச்சிதுபார்சலநிதியாங் கங்கையாலே- பாலமுதமென்றவொருபனிநீராலே, காச்சிதுபார்கனகமென்ற கையினலே-கலக்கியேவடித்திடுவாய் கங்கையைத்தான் ஏச்சிது பாரொச்சலமுந்தெளிந்துபோகு-மினத்தோடே யினமதுசேர்ந் தேகமாமே. (உய)

ஏகமென்றவேகமென்னதேகந்தேக மெடுத்ததொருதுறை க்கெல்லா மிதுவேயன்னம், பாகமென்றபாகமென்ன கைபாகந்

* சார்ந்தவென்பது - சார்த்தவெனவிகாரப்பட்டது.

தான்-பாலமுதம்வடித்துநீ பசிதீர்த்தக்கால், காகமென்றகாசமென்ன விதுவேயன்னங்-கருவுதித்தமதுச்சுன்னங் காட்டொணாதே, மாகமென்றமாகமென்ன மதியினாலே-வண்மையா வறிகுருவை மாட்டினேனே. (உக)

மாட்டினேன்புலத்தியனே யின்னங்கேளு-மறைக்கவில்லை யொளிக்கவில்லை மறைப்போவில்லை, காட்டினேன் குருயாகமைஞ்சாங்காண்டங்-கைபாகஞ்செய்பாகங் கருவின்பாகன், பூட்டினேன்பூச்சரங்கொடுத்தாற்போலே-புத்தியுடனிந்நூலின்பொருளைக்காண்பாய், பாட்டினேன்பலகலைகளிந்நூலுக்குட்-பராசத்திதிருவருளாற்பகர்ந்திட்டேனே. (உஉ)

ஐங்காயம்.

பகர்ந்திட்டேனாதவித்திரண்டுங்கூடி-பரிவானவண்டவித்து பழச்சாறாகும், அவிர்ந்திட்டவிரண்டுவித்துமுடிதானையா-வதிற்பிறந்தமுடிவித்துபழச்சாறாகும், தகர்ந்திட்டவைங்காயமைந்துங்கூடிச்-சமைந்ததேவம்மூலமைந்துமாச்சு, வகிர்ந்திட்டவொன்றிலேயைந்துமாச்சு - மகத்தானதெளிவாச்சு தொன்றாப்போச்சே. (உ௩)

ஒன்றானவொன்றன்றேயிரண்டதாச்சு - தோகோகோ வுருவாச்சு குருவுமாச்சு, மூன்றானேமூன்றன்றேமுடிதானாச்சு-மொழிவரியகாயாச்சு பழமுமாச்சு, நன்றானநன்றன்றே காலதாச்சு-நலமானதிகைப்பூடு மிதுவேயாச்சு, தன்றானவாயிரமா மைந்துமாச்சு-ததிற்பிறந்தபெண்பூடு பூவுமாச்சே. (உ௪)

திகைப்பூடு.

பூவானபூவதுவே செடிதானன்று பூதலத்திலெங்குமுண்டு பூத்தானன்று, மூவானமூன்றதுவுமொன்றாச்சேர்ந்தான்-முப்பூதம்பிறக்குமடாவெள்ளைப்பூத்தான், ஆவானவிதற்குப் பேரிதுதானையா-வாரறிவார்திகைப்பூண்டையவனிமீதில், மாவானமாக்களைத்தமுதந்தன்னை-வகைபெறவேநலமாகச்சொல்லக்கேளே. (உ௫)

இரசக்கட்டு.

கேளையாவன்பாகப்புலத்தியாநீ-கெவுனமென்றரசக்குளிகை கெவுன நன்று, ஆளையாபின்சொன்னவைஞ்சாங்காண்ட-மதின்முடிந்தமாணிக்கக் கன்மாளாமன், மாளையாமாக்கனாத்த திராவகந்தான்-மகத்தானவெடியுப்பையதனிற்போட்டு, பாளையாகெவுனமென்றகெவுனவித்தை-பரிபாடைபகர்தரநீயினுங்கேளே (உ௬

இன்னங்கேளினமறிந்துசொல்வேனையா- வெடுத்தமுறைதப்பாது குருவின்வாக்கியம், அன்னங்கேள்வெடியுப்பும் பாறையுப்பா-மைந்ததினான்முப்பூவுமுடிந்துபோச்சு, இன்னங்கேண்முன்சொன்னகுருவைநீதா-னினிதாகச்சொல்லிவிட்டேனந்திலேகா

ண்வன்னங்கேள்வெடியுப்பையதனிற்போட்டே-வளமாகத்திபெ
ரிப்பாய்சாமந்தானே. (உஎ)

சாமந்தானெரித்தக்காற் கட்டிப்போகுஞ் - சாற்றரியமாக்
கெவுனகுளிகைதானும்,வாமந்தான்வைத்துவைத்துப் பூசிப்பாய்
நீ-வங்கம்போற் கட்டிமிகச்சிவந்துகாணும், நாமந்தான்சொல்லி
விட்டேனெளிக்கவில்லை - நலமானவெடியுப்பே சிவவுப்பாகும்,
பாமமாச்சொல்லாமன்மறைத்தார்சித்தர், பரமானகணேசன்று
ண்மகிமைகேளே. (உஅ)

கேண்மூலாதாரவிநாயகன்றனுண்மைக் - கேரமாம்பூரண
த்தைக் கூறவன்பா, நீண்மறுவினின்மலமா நிறைந்தசோதி - நிக
ரில்லாவவங்கோணங்கணேசன்வீடு, வாண்மிக்கவோர்வட்டமைங்
கோணந்தான் - வல்லபைமாதிருக்கு மோங்காரவீடு, கோண்மி
கையற்றெளிருமொருதிரிகோணத்திற்-குமுூஉமுூஇமுூவென
வட்சரத்தைமாறே. (உகூ)

மாறவேயெழுத்ததனைச் சொல்லக்கேளு - மகத்தானவைங்
கோணமைஞ்சுங்கேளு,ஏறுவாய்சுந்தரமேஓங்ரீங்கென்றே-யேறி
ஸ்ரீங்கிறீங் அறிங்கொன் றூன்றுவாய்நீ, ஆறுவாயைங்கோணவடித
ன்மூலமாரறியப்போகிற ரவனிமீதே, கூறுவாய்கணபதியின் சக்
கரத்தைக்-கேசரத்தின்மூலமதை யடைத்திடாயே. (கூய)

அடைத்திடுவா யட்சரங்கள் பிசகாமற்று-னடவாகத் தூபதீ
பாதிதந்தே, எடுத்துமல்லலட்சமுரு செபித்தாயாகி - லென்ன
சொல்வேன்கணபதிதான்பிரகாசிப்பான், மடைடத்தனமாத்திரியா
தேசொல்லக்கெளு-மகத்தானவல்லபையும் பிரகாசிப்பாள்,கொ
டுத்திடுவாள் வல்லபைநீ கேட்டவல்லா - வரங்களை மாதவிறைற்பூ
சிப்பாயே. (கூக)

பூசிமூலாதார சுழினையெட்டிப் - புகழாகக் கும்பித்தான்
மவுநஞ்சித்தி, வாசியைங்கென்று நீதம்பித்தக்கால்- வாழலாங்கோ
டியுகம்வாதஞ்சித்தி பூசைசெயி னங்கோணஞ்சித்தியாகும் - புக
லரியமுதற்சேவை தெரிந்துகொண்டே,கூசாமற்கும்பித்துத்தம்
பித்தக்காற்-கோடானகோடியுகமிருக்கலாமே. (கூஉ

ஆகுமேயோகமது பார்க்குநாளி - லாதார்சக்கரத்தி னறை
யைக்கீறி, ஒகுமேயோங்காரதிரிகோணத்தி - லொருமித்துப்பிச
கொன்றுப்வாராதூன்று, காகுமேகற்பூர தீபசோதி - கடாட்சிப்
பாள் சக்கரத்தைப்பூசிப்பாய்நீ, வாகுமேவாசியைநீ யிழுத்துவா
ங்கி-மகத்தானமனக்கண் ணாலெலாட்டிப்பாமே. (கூஙா)

பாரோநீகேசரத்தின் சேர்த்திகாணு-பருதியுடன்றெரிசித்தே
யப்பாற்பாரு, ஓரோநீகணபதியின் மூலஞ்சொன்னே-னொருமை
யுடன்புலத்தியனை யறிந்துபாரு, வரோநீபரப்பிரம சொரூபமூ
லம்-வரிசைபெறநாதர்கடம் மகிமையாலே, பாரோநீபதினென்
பேர் சித்தர்மெய்க்கப்-பாடுமிக்காண்டத்தினது மகிமைதானே()

சுவாதிட்டானம்.

மகிமைபெறு பரிபாடை யைந்தாங்காண்ட - வண்பொரு
ளப்பேரறிவா லரிந்துதேறே, மகிமைமிகு குண்டலியின் மூலங்
கேளு - மாசில்சுவாதிட்டானக் குறியைப்பாரு, நகலிலுயற் நாற்
கோண மிருகோணந்தா-நலமானமுக்கோண மொன்றேவட்டம்
தலைகமை பெறுநாகரத்தின் மேலேபோடு-சாற்று நங் மங் ஸ்ரீங்
அங் மறிங்கென்றுங்கே. (௫௫)

ஆரவேநாற்கோண மடைவாப்போகிட்-டக்கோணத்தட்சர
ங்கடம்மிலைய, பூரணமா விரிரண்டட் சரத்தைப்போடு - புகழ்
பெரியவித்துவிலேயங்கென் றான்று, நீரொன்ற நிர்க்குணத்தை நி
ராமயத்தை-நேயமாயோகத்திற்பூசிப்பாய்நீ,வாரொன்றவாசியை
நீயிழுத்துவாங்கி-வடகலையிற்பார்த்துமெல்லச் சாதிப்பாயே. ()

சாதியாம்வாசியைநீ வரவழைத்துச் - சதகோடி யுகமளவும்
யோகம்பாரு, எதிலரோவுனைவெல்லார்சித்தர்வெல்லா-ரொன்மக
னேசுந்தரமேயின்னங்கேளு ஆதியிலேதீப தூபாதிதந்தே-யடை
வாகவிலட்முரு செபித்தாயேலப், போதுநின்கண்ணெதிரோசாற்
றவொண்ணுப்-புகழ்பெரிய சோதியது காணுந்தானே. (௫௭)

மணிபூரகம்.

தானேதானுற்கோண மன்றேசித்தி-தகைபெறுநா லெழுந்
துகளு மடைவாச்சித்தி,சேனேதான்பரப்பிரமமவுநஞ்சித்தி-செ
யமாகசரஸ்வதியும்பிரமன்றனும்,மானேதான்கேட்டவெல்லாமீ
வார்பாரு-மகத்தானபூரகத்தின் வண்மைகேளு, வானேதான்பூர
கத்தின்மூலமையா-வண்மையதாவறைநடுவே கிறக்கேளே (௫௮)

கிறுவாய்முக்கோண நடுவேசற்றுங்-கேடிலுயர் மகாரமோ
டுகாரங்காணும், பிறுவாய் ஓங்காரம் ஸ்ரீங்காரந்தாம்-பிறிவாகச்சு
ந்தரமேபிரித்துப்போடு,ஊறிலாதியோகத்திலிருக்கும்போதே-
யொட்டுவாய்சக்கரத்தை யொட்டிப்பாரு, மாறுவாயட்சரங்கட
மையறிந்தே-மகத்தானசக்கரத்திலாடுவாயே (௫௯)

சக்கரத்திலாடுகின்றசத்திபீதஞ் -சாதுவாய்த்தவரூமற் சார்
ந்துகேளு, அக்கரத்திலாடுமட் சரத்தைநாட்டே-யளவிறந்த வித்
தையடாயார்தாஞ் சொல்வார், விக்ரத்திலாடுகின்ற மால்பூமாது

வேதாந்தபூரணத்தில் விளக்கங்காணும், சக்கரத்திலாடுகின்ற வாசி
பீடஞ்-சற்குருவின்கடாட்சத்தாற் சோதிப்பாயே. (சய)

சோதித்தாற்றெரியுமடாமவுநபீடஞ் சொல்லரியபூரணந்தா
ன்சொல்லப்போமோ, வாதித்தான்மவுநமாவாசிகொண்டு-மரட்
டலாமிடைகலையின்வாசித்தம்பம், ஆதித்தானுதியடாவங்கென்றா
ன்றி-யரகராவாசியைநீ யிழுத்துவாங்கு,சோதித்துக்கும்பித்தோ
ர் நிலையாதில்லு-சொலற்கரியசூரியன்போற்காணுவாயே (சக)

காணுமையாரவிகோடிமதியுங்காணுங்-காணரியவதிசயங்கள்
காணும்பாரு, மாணெழின்மாலிலக்குமியோடமர்பொற்பீடம்-
வழுத்தரியமாப்பெரியமனக்கண்ணுமேல,கானரியவவர்கடரிசனத்
தைக்கண்டாற்-கழறுபதிறுறுவயதாவாபீது, வேணுமென்றியோ
கமதையார்தாஞ்செய்வார்-வேணவாவற்றவனேயோகிமாதோ. (

யோகிக்கேயாகுமன்றி மற்றோர்க்காகா - துலகத்தோர்க்கா
காதுநிசமாஞ்சொன்னேன், போகிக்குமாகாதுஞானிக்காகும்-பு
கழ்பெரியமவுனிக்குமகத்தான்சித்தி, யோகிக்கேயாகும் பூரணந்
தின்மூலம்-யோகத்தைப்பூசித்துத் தெரிசிப்பாய்நீ,ஆகுமோமற்
றவர்க்கிந்தமார்க்க- மடுக்கினவர்க்கிடுக்கண்வந் தெய்துங்காணே.

காணவேதீபதுபாதிதந்தே-கண்மணியே யிலட்சமுறு செ
பித்தாயாகில்,வீணுகப்போகாதே,யிராசியோர்க்கு - விண்டுதிரு
மாதுபிரசன்னமாவார், கோணலிலாத்தொட்டகுறையென்புதெ
ன்னே-கூறுதுலாராசியினோர்க் கெய்துஞ்சித்தி, ஆணுகப்பிறந்தா
லுமமைப்புவேண்டு--மநாகத்தின் மூலமதையறையக்கேளே. ()

அநாகதம்.

அறையக்கே ளநாகத்தின் மூலஞ்சொல்வே - னாரறிவாரறு
கோணமாறுதாரம்,அறைவரியவறுகோணமுன்னேபோகிட்-டப்
பனேமுக்கோணம் பரிவாப்போடு, நறுவியவோர் நடுமூலத்தகா
ரம்போடு-நடுவினுயர் சிகாரமோடுகாரம்போடு, மறுவற்றவடப
க்கம்றிகாரம்போடு-மகத்தானவகாரமொடு கிலியுங்கூட்டே.(சரு

கூட்டுவாயோகசிவ மவுநங்காணும்-கூறரியநாதவித்துகெவு
னயோகம்,நாட்டுவாயுருத்திரசிவயோகவாசி- நவினுருத்ரபீசத்தி
னுணுக்காசணும், ஆட்டுவாயஞ்செழுத்துமுன்னேபோகிட்-டர
கராவாசியைநீசிங்கென்றான்று, பூட்டுவாய்கும்பித்துச்செபித்தா
யானுற்-புகழானவாசியது நிலைக்கும்பாரோ. (சசா)

நிலைக்குமது நடுவணையிற்சிகாரபீட - நிற்குணத்தில்வாயில
துமூடும்பாரு, உலைக்குமஃதொன்பதர்ம்வாயின்மூடு-மோர்வா
யின்மூடாதேயுனாக்கக்கேளு, அலைக்குமப்பாவநாகத்தி னபான

வாயுவடுத்திருக்குமோர்வேயிலார்தாங்காண்பார் நிலைக்குமைய ஞானக் கணதனைக்கொண்டு - நிலைத்துநீபார்த்தக்காற் றெரியும் பாரே. (சஎ)

பாராய்நீநாதர்கடமாயைமாயை - பகருவாறென்றனுயிரத் தைப்பாரு, நேராகக்காவிய புராணன்சொன்னே - னிகழ்த்திடற் கரியவோ னாஞ்சாங்காண்டம், தேராய்நீயோர்வாயில் கண்டே சொன்னேன் - நிகழொன்பதற்குமேற் பத்தாம்வாயில், ஓராய்நீ கொங்கணருங்கடைக்காண்டத்தி - லொளிக்காமற்சொல்லிவிட்டா ரறியலாமே. (சஅ)

விசுத்தி.

அறியலாமநாகத்தின் மூலமார்சு - தப்பாமே சொல்லுகிறே ன் விசுத்திவீடு, அறியலாமறுகோணமடைவாக்றி - யவ்வறையில கராமொடு வகாரம்போடு, மறுவிலோங்காரம் றீங்காரம்போடு - மகத்தானசிவயநம வென்றேயோது, நெரியாகப் பத்தெழுத்து மூன்னேபோடு - நிகரிலாமயேச்சுரன்றனேர்மைகேளே. (சகூ)

நேர்மைகேணின்மலமா நின்றசோதி - நிகழ்த்தரிய மயேச்சு ரன்ற னிறத்தின்மேலாஞ், சீர்மைமலிதேவதைக ளைந்துமாகுந் - தெளிவாகவங்கென்று செபித்தேதைய, நேர்மையா வாசியைநீயி ழுத்துவாங்கி - நிலைத்திருந்து கும்பித்துமவுனமாயின் ஆர்மையா, மைந்துக்குண் மூலசித்தி - யாதாரமவுனசித்தி காணும்பாரே (ருய)

பஞ்சபட்சி.

ஆதாரவாயிலதுகண்டாயானு - லன்றன்றேு பஞ்சபட்சியொ டுக்கங்காணும், வேதாரவாயில்கடந்தப்பால்சென்றால் - வெளியான பரவெளியாம் விசுத்திவீடு, ஆதாரவாயிலது வாயுபீட - மங்கென் றுதானெழும்பு மிறுக்கிக்கொள்ளு, சாதாரவாயிலென்றேயதற்கு நாமஞ் - சச்சிதாநந்தவெளி யொடுக்கமாமே. (ருக)

ஒடுக்கமாம்வாசிதனையிழுத்தேகாந்தத் - துகங்கோடியோகத் திலிருந்துதேறின், அடுக்குமையவாசியம்பொழுதேசித்தி - யாதார யோகசித்திமவுநஞ்சித்தி, கெடுக்கரியகெவுனசித்திஞானசித்தி - கே சரத்தின்குளிகைசித்திதிவாதஞ்சித்தி, வடுப்படலில்வாதபித்தவை யஞ்சித்தி - வாழலாமெனப்போனீவாழலாமே. (ருஉ)

ஆரமேவசெந்நீர் தண்பனிநீருண்டா - லடைவாக வேறலாம் யோகமார்க்கம், நேரவேதூபதீபாதிபீந்தே - நேயமாப் பூசித்தா ன்முத்தியுண்டாம், சீரியமயேச்சுரனம் பிகைமாதோடு - தெரிசன ந்தந்தருள்வர்விரத்தியக்கமாகித், தோரியவிசுத்தியின்றன்மூலமா ர்சு - செழித்திருக்களின்னுமொருசெய்திகேளே. (ருரு)

செறிதருசீர்வி சத்தியின்மூலஞ்சொன்னேன் - செம்மைமி
குசதாசிவத்தின் மூலங்கேளு,அறைவரியவைங்கோணமுக்கோண
ந்தா - மதினடுவின்முக்கோண மடைவாய்போடு, முறையாகமூ
ன்றெழுத்தை முக்கோணத்தின் -மொழிவரியசதாசிவத்தி னெழு
த்தைப்போகிட்,டுறுதியாசோடசத்தின் விந்துநாத-மோங்கஉங்அ
ங்கிசாவென்றோதே. (௫௪)

ஆக்கினை.

ஓதவே சதாசிவத்தின் சத்திநேர்மை-யோங்கார செயகம்ப
மொன்றேகாணும்,வாதமாவங்கென்றுவாசிகொண்டு-வண்மையா
க்கும்பித்துமவுனமானால்மோதுமேயலைவந்துமோதினாற்போன்
முழங்குமிடியென்னவே மின்னல்காணும், போதவேபரைவாயி
லங்கேதோன்றும்-புகலரியவாக்கினையின் பாகந்தானே. (௫௫)

பாகமென்றபாகமிதைப் போலுமுண்டோ-பரவரியசதாசிவ
த்தைச் சத்தியோடே,ஆகமகிழ்ந்துயர்தூப தீபந்தந்தே-யர்ச்ச
னைநைவேத்தியமுஞ்செய்துபோற்றி,மோகமறமனம்வாக்குக்கா
யமொன்று-மொழிவரியவிலட்சமுருசெபித்தாயாகில் ஏகமுயர்
சதாசிவனுஞ்சத்தியுங்கண் ணெதிர்வந்துபிரத்தியக்கமாவர்தாமே

தானேதானும்பரி பூரணமாமைந்த-சாற்றரியபரைவாயி ல
லையாதோங்கு,வானேவானளவுகயிலாசவெற்பு-வளரோமசலை
யங்கே கண்டுகொண்டு - தானேதானின்றநிலை யறியச்சொன்னே
ன்-சதுராகவிதையறிய வேண்டுமாயின்,தானே தான்றனக்குநிகரு
லகில்யாருஞ்-சாற்றரியவிந்நூலைநூறுமாமே. (௫௭)

ஆமேதானுதாரமார்தாங்காண்பா-ராயாயிரத்தைந்நூற்றினைக்
கண்டோர்கள் ஏமேதானென்னூலைமுழுதும்பார்த்தோ -னென்
னைப்போலாயிடுவான் சரதமாக, வாமேதான்வாமமென்றமுப்பூ
சித்தி-மகத்தானமந்திரங்கள்செபங்கள்சித்திசேமேதானொருமை
மனதோடிருந்தாற்-செப்பரியசெகற்குருவையறியலாமே. (௫௮

அறியவண்டசத்தசா கரமுஞ்சொன்னே- னதிலிருந்தசுத்த
சல மடைவாச்சொன்னேன்,அறியவேயண்டத்திற்பிண்டஞ்சொ
ன்னே-னறிவரியவாதத்தின் முப்பூச்சொன்னேன், மறுவிலாமச்ச
முனி யெண்ணூற்றுக்குள்-மறைத்துவைத்தகுரு மூலிவகையை
ச்சொன்னேன், செறிதருமெய்ப் பொருளமைந்த விந்நூற்கண்
ணே-செப்பரியசல்லிவேர் சாற்றினேனே. (௫௯)

சல்லிவேர்.

சாற்றியவோர் சல்லிவேர் முப்பூவாச்சு - தாரணியோரறிய
வெளி யிட்டேனையா,ஆற்றலுடையிவ்வேறே வெல்லும்வெல்லு-

மறுபத்துநான்குசித்து மிதனாலாடும், நாற்றிசையிலுள்ளசித்தர்யாருமிந்த-நவிலரியசல்லிவே ரதனைச்சொல்லார், தேற்றமிகுபற்பினியின்கல்லன்றோசிர்ச் செகற்குருதன்னாணைவிடக்கல்லாமன்றோ

குருவண்டு - விடக்கல்லு.

ஆகுமிஃதின்னுமோர் செய்தியைமைந்தா-வண்டத்தின் குருவண்ணை யதையக்கேளு, வாகுபற்பினியினிருபுறமும்வண்டு-வண்மைமலிவிழியதுதான் சொட்டைபார்த்து, வேகமொடுகுளவிபுழுவெடுத்துச்சென்று -வியப்புறவேயதைக்குளவி யாக்கவந்தத், தேகமொடுபிறப்புச்சாக்காடுதள்ளிச்- சேருபெற்றப் புழுவுங்குளவியாச்சே. (௫௧)

ஆச்சுதையாவண்டவோ டண்டமாகு-மரகராநாதவிந்து குருவேயாகும், சூச்சமறவம்மூன்றுஞ்சேருமானாற்-குருவண்டுநாபியென்று மதற்குப்பேராம், பேச்சரியவிடக்கல்லு நாபியாகும்-பெருமைநிறைமூன்றுப்புமுப்புவாகும் ஏச்சிலாவிதனைமறைத்திட்டார்சித்த-ரென்னைப்போல் வெளியிட்டுச் சொல்லாரன்றே.()

நவசித்தர் வாக்கு.

சொல்லாதேயாயிரத்திலொருநூல்சொல்லுஞ் - சொன்னாலுமந்நூலைவெளிவிடார்கள் நல்லபயன்றருமென்னூல்போலோர்நூலு-நானிலத்திலில்லையிப்படியார்சொன்னார், கல்வியறிவுடையகருவூரர்சொன்னார் - கறையில்குணக் குதம்பைசித்த ரொன்னுநல்லோர்,அல்லலறக்கடல்புடைசூ ழுலகுளோர்க-ளறிந்துய்யவறைந்திட்டா ரருளினாலே. (௫௩)

அருளுடையவிடைக்காடரநேகஞ்சொன்னா -ரறிவறிந்தவகப்பைசித்த ரநேகஞ்சொன்னார், தெருளுடையதேரையரநேகஞ் சொன்னார் - தேவதத்தனென்றவர்க்குப்பொருளுமாச்சு, மருளிலாவிராமனென் றவர்க்குப்பேரா-மருவறுசீர்ப்பின்பிறப்பி லிலட்சஞ்சொன்னார்,இருளருமிப்பிறப்பிலாயிரத்தோர்நூறு-மின்பமுடன்சொல்லிவிட்டா ரின்னங்கேளே. (௫௪)

பதினெண்பேர்.

கேளையாபூகியா யுகங்கள்கண்டு - கேதமிகுபிறப் பிறப்பையொருங்கேதள்ளி, கேளையாவிக்கொடிய கலியுகத்திற் - கேடிலாவென்றனக்குச்சீடனானார்,கோளிலாவவன்றனக்குளவாம்பேணாக்கூறவென்னான் முடிவுபெறுதனந்தமாமற்,றுளையாவறிவுடையாரிந்நூலாராய்ந்-தறிவிக்க மிகவெளியிவ் வைந்நூறன்றே. (௫௫)

அறைவரியதிருமூலர் சொன்னமார்க்க-மையனே மாநிலத்தில் யாவர்காண்பார், குறைவருசீர்க்கோரக்கர் வெகுநூல்சொன்

னார் - கோதிலுயருரோமரிஷி கருவாய்ச்சொன்னார், நிறைவுபெறுசட்டைமுனி தெளிவாய்ச்சொன்னார்-நிமலசுந்தரர் சுருக்கமாகச்சொன்னார், பொறையாதி குணமுடைய யோகநாதர்-பூட்டியே வெகுமறைப்பாய் பாடினாரே. (௬௫)

பாடினார்கொங்கணரு மநேககோடி - பாரதனிலவையெல்லாமறைப்பாக்காணும், சூடினார்சுருக்கமையா சொருபானந்தர் சொன்னமொழிவெகுவாகும் யாருங்காணார், தேடியேகருக்குருமற் றுள்ளவெல்லாந்-தெரிந்துகொளவரிதாக மறைத்துச்சொன்னார், பாடினார்பதினெண்பேர் பாடினாலும்-பாலகனே யிந்நூல்போல்வெளியிடாரே. (௬௭)

வெளியாகச்சொன்னவொருவேதாந்தத்தை- மிகத்தெளிவாமைந்தாங் காண்டத்திற்பாரு, தெளிவுடையசித்தருக்கிஃ துயிராமைய-செப்பினேனிதையறிந் தடக்கம்பண்ணே, அளியோடுகருக்குருமற்றனைத்துஞ்சீரா-வறைதருநாலாங்காண்ட முழுதும்பாரு'களியோடுகுருமொழியாவைத்திந்நூலைக் - கண்டுதெளிகுருமுறைகடம்மையன்றே. (௬௮)

ஐந்நூற்றிற்சொன்னபடிசெய்தாயானா-லப்பனேவாசியது புரளாதென்றும், ஐந்நூற்றினான்சொன்னபடியார்செய்வா-ராயித்தில்வாதவித்தை யார்தாஞ்செய்வார், ஐந்நூற்றிற்கருக்கண்டுசெய்யவல்லார்க் - காகாதபொருளுண்டோ வடைவாப்பாரு, கைகந்நெல்லிக்கனிபோன்முப்பதனிற்சொன்ன-கருத்தெவர்களறிவார்களறிவர்யுகங் கலியாமன்றே. (௬௯)

கருதரியசித்தர்தம நிலையைச்சொன்னேன்-கணக்காகவாதாரமாறுஞ்சொன்னேன், மருவரியமவுனசிவ யோகஞ்சொன்னேன்-மகத்தானவாசிநிலை யொடுக்கஞ்சொன்னேன், அருவானபஞ்சகர்த்த ரவையுஞ்சொன்னேன் - னறிவரியவட்சரத்தி னிலையைச்சொன்னேன், துருசிலாத்துருவத்தின் மேருஞ்சொன்னேன்- றுலர்ராசி .டுத்தவர்க்கே பலிக்குமன்னே. (௭௰)

## மும்மண்டலம்.

அடுத்தக்காலாதாரமாறுமாகு-மறுமுகவனருளினாற்றெளிவுண்டாகும், மடுத்தக்கான்மண்டலங்கண்மூன்றுங்கேளு - மகத்தானவென்றன்வாக் கமுதவாக்கே, கடுத்தக்காற்கொடியநம னணுகானையா-காசினியினீயுமொருகுருவாவாய்காண், படுத்தக்காற்பரமண்டலத்தின்சோதி-பார்த்தக்காற்றெரியுமதுசொல்லக்கேளே

## சூரியமண்டலம் – சந்திரமண்டலம்.

சொல்லக்கேள்பரமண்ட லத்தைத்தாண்டிச்-சொற்பெரிய வாசியைநீதம்பித்தக்கால், அல்லகற்றுமாதித்தமண்டலந்தா-னதி

னுள்ளேயகாரமோ டுகாரமிடம், சொல்லரிய கதிரிரவி கோடா கோடிசோதிகலாநிதி கோடிகாணும்பாரு, அல்லலறவாசியை நீயி ழுத்துப்பார்த்தா-லப்பொழுதுதேகம்விளக் கொளிபோலாமே

ஒளிபெருகு சூரியமண்டலத்தைத்தாண்டி-யுற்றுப்பார்த்தி டின்ஞானக்கணணினாலே, தளிர்பெருகுசந்திரமண்டலமுங்காணு நானிலத்தி லெவர்சொல்ல வல்லாரைய, ஒளிர்கிரண நிறையிரவி கோடிகாணு-முறைப்பரியசந்திர மண்டலத்திலாங்கே, குளிர்ச்சி மிகுசோதி மின்னல்போலக்காணுங் - கூறரியவம்பிறையே வீடு மாமே. (எ௩)

வீடானமவுநமையா வங்கென் றூன்றி-விளக்கவேசெபித்து நீகும்பித்தக்கால், கோடானகோடிரவியொளியேகாணுங்-குருவி ருந்தாரவர்பெருமையென்னசொல்வேன், வேடானலொருவரா ல்வெல்லப்போமோ - வேதாந்தசொரூபநிலைகாணப்போமோ, ஆடானவாணவங்க ளற்றுப்போனு - லப்பொழுதே மாயையெ லாமகன்றுபோமே. (எ௪)

போச்சப்பாபிறப்பிறப்புமாண்டுபோகும்-புகழுடையவர தனம்போன் மேனியாகும், வாய்ச்சுதுபார்வாசியது நிலத்துப் போகும்-மநத்தானகாயமது பெலத்துப்போகும், கூச்சமுறத் துர்க்குண நற்குணங்களாகுங்-கோடானகோடியுகம் வாழலாகும் ஆச்சுதுபார்வாமத்தால்யோகமாகு-மவையன்றியொன்று மில்லை காயம்பாழே. (எ௫)

காயமாம் ஓங்காரமூலாதாரங்-கண்டுநமசிவாயமந்திரமுமாச்சு மாமேயபுமூலத்தினகாரமொடுகார - மேலானமகாரமது மூன் றேமூலம், நாயகமாமொன்பதிலே பஞ்சகர்த்தர்-நலமானவான் மாவு முயிரோயாகும், ஓயமாமோமென்றுசெபித்தாயானு-லுகங் கோடிகாயமது பெலத்துப்போமே. (எ௬)

பூரணஏகாட்சரம்.

பெலத்துப்போம்பூரணத்தைச்சொல்லக்கேளு - பேரான சூக்குமத்தைப் புகலுகின்றேன், அலுத்துப்போம் அகாரமோடு காரமீசே-மதினடுவேஓங்காரமடைவாப்போடு, வலுத்துப்போமதி னடுவேமகாரம்போடு-மகாரத்தினடுவேதானகாரவட்டம், ஒலித் திட்டவேஉம்மென்றறீங்காரம்போகிட்-டோங்கார வட்டத்திற்சூல ம்போடே. (எ௭)

வட்டமாயிருபக்கஞ்சிங்குவங்கு வகையாகவிருபுறமுமடைவா ய்போடே, அட்டமாசித்திகளின் சூட்சாசூட்ச-மண்டரண்டபகி ரண்டமிதற்கொவ்வாதே சட்டமாஞ்சங்கமென்றஅகாரமாச்சுசத கோடிமந்திரமு மிதுவேயாச்சு, திட்டமாவெட்டெழுத்து மிது வேயாச்சு-தெட்டெழுத்தாமிதற்குள்ளேயொடுக்கமாச்சே. எ௮

அட்சரபலிதம்.

ஆச்சுதுபார்மவுனசிவ யோகதீட்சை-யண்டசராசரங்களெ ல்லாமடங்கிப்போச்சு, பாய்ச்சுதுபார்பராபரமா மவுநதீட்சை-பாடினேன்பூரணகாவியத்தைப்பாரு,எச்சிலாவென்பாடன் மவுநஞான-மெய்துவிக்குமறவாதேயின்னுங்கேளு, வாய்ச்சுதுபார் கருவிகரணுதியான-கருவிருந்ததலங்களைநீ கண்டுகொள்ளே(எகூ)

கொள்ளையாவட்டகன்ம மாடவென்றாற் - கோசமாமிவ்வெழுத்தைக் குணமாப்போடு, அள்ளையாவஞ் செழுத்தாற் றியானம்பண்ணே-யதற்குநிகரில்லையெல்லா முனக்குச்சித்தி,வள்ளைமிக்கவாசிவழுவாதுபாரு-மகத்தானபெரியோர்கள்சொல்லாயா, விள்ளரியவேதாந்திக் கிந்நூல்வேண்டும்-விவேகமில்லாமானிடருக்குதவாதன்றே. (அய)

நின்மலதெரிசனம்.

உறவாகநிர்க்குணத்தை யொட்டிப்பார்த்தே, நேரிடத்திற் சோதிமின்ன லடைவாய்க்கண்டேன், பொறையோடு பூசித்துத் தெரிசித்தேன்வண் - புகழ்மலிந்தவதுகடந் தப்பாற்சென்றேன், முறையாகநின்மலத்தைப் பார்க்கவென்றான் - முடியாதென்றெண்ணிமெய்ஞ் ஞானக்கண்ணி, னெறியகாகநின்மலமாஞ் சோதி கண்டு-நேசித்துப்பூசித்துத் தெரிசித்தேனே. (அக)

தெரிசித்தேன்குளிகைகொண் டேறிப்பார்த்தேன்-சிவசிவா பூரணத்தை யறிவாற்கண்டேன், பரிசுத்ததலமென்ற பதியுங்கண்டேன் - பாலமுதமதனப்பா லமுதுங்கொண்டேன், அருச்சித்தேனகண்டமென்ற பிண்டமையா-வமுதநதிதெரிசனத்தால் மோக்கம்பெற்றேன்,தரிசித்தேபற்பநதிக் கப்பாற்சென்றேன்- றுவிலாறுதார சபைகண்டேனே. (அஉ)

சபையென்றாற்சபையதுவே வாறுதாரஞ் சதகோடிசித்தர்களுங் காண்பர்கொல்லோ,தபுதலிலாவறுமுகவன் கடாட்சத்தாலே-தரிசித்தேன் சிதம்பரத்தைத் தொண்டுசெய்தே , அபயமென்றேசிதம்பரத்தி லன்புளங்கொண் - டாயிரத்தெட்டிதழதனலர்ச்சித்தேனுன் நிபுணராஞ்சபையாரைக் கண்டேயப்பா-னேராகவாசிகொண் டேறினேனே. (அங)

சித்தர்கள்தர்க்கம்.

நேராகவேறுகையிற் பொதியில்வாழு-நிமலகுண வகத்தீசர் வருகவென்றார், நீராகவாயிரவிற்சித்தர்கூடி-நிலைவுடையேயென்றனை மதித்துத் தர்க்கஞ்செய்தார்,சீராகச்சித்தர்கடாநீயார்மந்தசெப்புகவென்றேயென்னை வினவினார்கள், பேராகவறுமுகவன் சீடனென்றே-பேரண்டவாசிகொண் டேறினேனே. (அச)

ஏறினேன்பேரண்டவாசிகொண்டே யேறுகையிலாயிரம்பேர்
சித்தர்கூடி,மாறினேன்றனை வெளியிலடக்கிக்கொண்டுமகத்தான
போர்செய்தா ரநேகம்பேர்கள், மீறினேனைந் நூற்றி னனுபவத்
தை-மீதண்டவண்டத்திலேறும்போதங்,காறினேனவருடனேதர்
க்கஞ்செய்தே-யண்டரண்டங்கடந்தப்பாற்பாய்ந்தேன்மன்னே

அண்டரண்ட நவகண்டம்.

பாய்ந்தண்டரண்டமதைக்கடந்தப்பாலே-பரிவாகநவகண்
டமேறும்போது,தோய்ந்தசீர்க் கொங்கணவன் றன்மாணுக்கன்-
றுகளிலாவைந் நூறு பேர்களோடே,ஆய்ந்தென்னைச் சேர்க்கவை
ந்நூறுபேரு-மடைவாகவினவிய நல் வினக்கட்கெல்லாம்,ஏய்ந்த
விடைகொடுத்தப்பாற் செல்லும்போதங்-கெய்தினார்குளிகைசித்
தர் கோடிமாதோ. (௮௬)

சதகோடிகுளிகை சித்தர்தர்க்கம்.

கோடியாஞ்சதகோடி குளிகைசித்தர்-கூட்டமா வெனைம
டக்கித்தர்க்கஞ்செய்தார், தேடியையாயிரத்தை யெடுத்துக்காட்
டித்-தேய்த்திலெய்தரிதா மவுனங்கொண்டேன் -கோடியாமலர்
களைத்தாமவுனமேகங் - கூறுமுகாந்தத்தெழுமோ ரிருள்போன்
றூடு, ழூடியதையான்கடந் தப்பாற்சென்றே - முன்கண்டுசிதம்
பரத்தைத் தரிசித்தேனே. (௮௭

சிதம்பரமாங்கனகசபை யாறுங்கண்டேன்-தெளிவான புல
த்தியனேமகிமைபாரு, கதம்பரமாங்காவியத்திற் பஞ்சாகாவ்யங்
களுக் குருநாலாங்காண்டங் கண்டுசொன்னேன், எதம்பரமாமெ
ன்னசொல்வே னின்னுஞ்சோதி-யென்மகனேபுலத்தியனே யின்
பாக்கேளு, குதம்பரமாங்கோடான கோடிவித்தை - கூறுவேன்
குருவருளாற் கூறுவேனே. (௮௮)

பூசைக்குறிப்பு.

கூறுகின்றேனதார பூசைமார்க்கங்-குணமான வாயிரத்தின்
மவுனபூசை,வீறுகின்றமவுனத்தில்யோகபூசை-விள்ளரியகெவுன
சித்துங் குளிகைபூசை,மாறுகின்றவாசிசித்து ஞானபூசை-வளமா
னவாதசித்து குருவின்பூசை, தேறுகின்றகாயாதி கற்பபூசை-தெ
ளிந்தவர்க்குச்சிவபூசை தெரியும்பாரே. (௮௯)

பாரையாமண்டத்தின்பூசைசொன்னேன்- பாலகனேயாதா
ரபூசைசொன்னேன்,தேரையாசிவயோகபூசை சொன்னேன்-சித
ம்பரத்தின்பரபூசை தெளிவாச்சொன்னேன், சீரையாமெஞ்ஞா
னபூசைசொன்னேன் - செப்பரியசற்குருதன்பூசைசொன்னேன்
ஓரையாசிவபூசையடைவாச்சொன்னே - னுத்தமனேயான்செய்
யுத்தியானந்கேளே. (௯௰)

உத்தமனே கேட்டிடுவாய்கருவாச்சொல்வே-னுனைப்பரியபொருளையா குருவாஞ்சூட்சம், சித்தானவரூபமையா சொரூப சித்தி-செவ்வனளித்திடுந்தெய்வயானைதோள்சேர், அத்தமீராறுடையவையன்றியான-மவனேசற் குருவெனக்கா மறிநீயைய,பத்தியுமையாளூதண்டக்கருவைக்கேளு-பகரரியவோங்காரபீடங்காணே.()

காணுவாய்குருவருளா லிதனையையா, காணரிதுகாணரிதுன்னடேன்யானும்,எணமர் -சிங்-வங்-அங்-உங்-மங்கென்றன்பா-விம்மனுவையுயநீ யோதுவாயே, மாணவேசுழுமுனையில் வாசிகொண்டு-மகத்தான முக்கோணம் வலமாவந்து, ஏணியாவிடைகலையில்வாசியோட்டி-யேறுவாய் துரியத்தின் மேலேமன்னே. ()

துரியத்தின்மேலேதிப்பாய்ந்தாயானாற்- றுகளில்பிராணாயாமந் துரியங்காணும், பிரியத்தோடங்கென்றுகும்பித்தக்காற்-பேசரியவொளிவட்டப் பிரபைகாணும், தெரிவரியவாதாரமாறுங்காணுஞ்-செப்பரியசிதம்பரத்தில் பீடங்காணும் புரியத்துப்பூரணமாஞ் சோதிகாணும்-பூரணத்தின்மனக்கண்ணை யோட்டிப்பாரே.()

ஓட்டிப்பார்பூரணத்தின்மேலாதார - மோகோகோதெரியுமறுசபையுமாங்கே, தாட்டிகமாவறிங்கென்றுதம்பித்தக்காற்- சதகோடியுகமளவும்வாழலாமே தாட்டம்பார்பளிச்சென்று தலமுங்காணு- நண்பாகப்பராபரத்தைப் பூசிப்பாயே, கோட்டமிலாதியான்செய்யுந் தியானஞ்செய்தாற்-குணமுடையோ யொருநாளுங் குறைவராதே. (௬௪)

வருமினியபயனெல்லாந் தியானத்தாலே - வச்சிரம்போற்காயமதுபெலத்துப்போகும், தெருமரோவுடலதுவச்சிரம்போலாயிற்-றேசிமயன்றதற்கோர்பேருளதாமற்றை, அரியசீரட்சரங்கள்சித்தியாகு-மாதாரஞ்சித்தியடாயோகஞ்சித்தி, துருவமெனுந் துரியமொடுதுரியாதீதத்- துகளிலாச்சித்தர்களே காணுமன்றே.

சாதி - தேயம்.

காணுமேகாணரிய துரியாதீதங்-காசினியில்,ரறிவார் வழலைமார்க்கம், கோணலிலாக்கேசரத்தின் சாதிகேளு-கூறறியசாதிநான்காமவற்றுள், மானெழில்சேரத்தி னிவண்சோழதேயன் - வடிவேற்கட்சங்கினிசீர்ப் பாண்டிநாடாம், எணுயர்சித்தினி சேரனூந்தேய-மென்மகனேபதுமினியொண் காசிமன்னே. (௬௫)

தேயவளப்பம்.

மன்னியவர்வாழ்தேயவளப்பந்தன்னை-வழுத்துகிறேன்புலத்தியனேயன்பாய்க்கேளு, பன்னரியசோழவளநாட்டின்வண்மைபசும்பொன்போற்றானிருக்கும் பாருபாரு, துன்னரியபாண்டி

வள நாட்டின்வண்மை சொல்லரியபச்சைபோற் காணுமையா, மின்னுமணிமுடிச்சேர நாடுந்தேய-மேலான வெண்மைநிற மாகுந்தானே. (௩௭)

தாமையா நளிகடல்சூழவனிமீது-சாற்றுமொருகறுப்புவண்ணங்காசிநாடு, நாமெய்யா நான்கினது நிறமுஞ்சொன்னேன்-நாதர்கடாமறிவர்மற்றவர்காண்பாரோ, காமையாகாசி வள நாட்டிப்பெண்கள்-கற்புடையா கவரீரைந்நூறுபேர்கள், ஆமையாயாவவர்கடமக்குள்ளேயெல்லா - மாய்ந்தெடுத்தோமாயிரத்தி லொருத்தியாமே. (௩௮)

ஆமவடன்சாதிபது மினியான்சாதி - யவளுடைய விராசிதனைக் கருதிநோக்கின், சேமமுடையவடனதிராசிகன்னி - செம்மலேயவள்ராசிதுலாமுமாகும், வாமமிகுமவள்வயது பதினாறுகும் வாலிபமாமமுதப்பெண் கூடுநாளில், தாமமிகுசித்திரையாமாதந்தன்னிற்-றனிச்சுக்ரவாரத்தி லுதித்தாள்பாரே. (௩௯)

பாரோநீபஞ்சமியாமுத்திரத்திற் - பால்போலேகாயுமந்தப் பருவந்தன்னில், மாரோநீமத்தியானம்பதினைந்துக்குண் - மகத்தானசதிபுருடர்கூடுநாளில், நேரோநீ மூன்றுதிங்க ளாகும்போது-நிறையாக நாதவிந்துதிரண்டெழுந்தே, ஆரோநீ யஞ்சுதிங்களம்மாவாசை-யரகராபூர்வபட்ச ஞாயிறுமே. (௪௰)

ஞாயிறுமந்நூற்றிற் பலிக்குஞ்சித்தி - நாதர்கடாமறைத்த நூல் குருநூலாமல், ஆயிரமையாயிரத்தை யாய்ந்துநோக்கி-ஞானதொகையைந்நூற்றி லடங்கிப்போமே , ஞாயிறுபோல்விளங்குமென் னமுதவாக்கா-நவரத்ன நால்வேதமுழுதுஞ்சொன்னேன். ஆயிரத்திலறைகருவின் சூட்சாசூட்ச-மாதியெலா நவினுன்காங்காண்டமுற்றே. (௪௰௧)

நாலாங்காண்டம்-முற்றிற்று.

ஆ காண்டம்-சறு-விருத்தம்-சாஉ

# ஐந்தாங்காண்டம்.

ஆதிநடுவந்தமிலாப்பொருளைமுக்க - ணமலனையெண்டோளனையம் பலத்திலாடும், சோதியைநின் மலனைநிராமயனைமேனாட்-சுந்தரர்காப் பரவைபாற் றூதுசென்ற, கோதிலுமாபதியைபசுபதியைத்தூய- குணக்குன்றையருட்கடலை யிமயவெற்பு மாதியவும்பாகனையன் போடுபோற்றி - மாசிலைந்தாங் காண்டமதைவாய்விண்டேனே. ()

வாதமெனு நூற்கெல்லாங்குரு நூலாகும்-வருந்தியிந்தவைவந் நூறுங்கருவாய்ப்பாடிச், சாதகமாப்பரிபாடையனைத்துமேமார்த்-தாண்டமெனவிளக்கவைந்தாங்காண்டத்தில், பூதமெனுமைம்பூதநிலையைக்கண்டு-போதவேவாசியொட்டி யறிவினாலே, காதவழிபோகாமற் கருத்தேடாமற் - காலறிந்துநிலையினின்று கருதினேனே. (உ)

ஏதமிலொண்பூரணத்தா லுலகமாச்சு-தியம்பரியபிருதுவியாற் பிண்டமாச்சு, வேதமெனுநிராமயத்தாற்றேயுவாச்சு-விளங்கிநின்றவாசியினா லறிவுண்டாச்சு, வாதமெனும்வாசியினால்வாயுவண்டம்-வகையறிந்தா லாதியினாற் சத்தமாச்சு, பூதமென்றபோதமதை யறிந்தாராகிற்-பூபதியோகம்பெற்று வாழ்வர்தாமே. (௩)

வாழ்வுடையோயறிவுடையோய் பொறையின்மிக்கோய்-வழுத்துநற்குணமுடையோய் வாய்மையோன, கீழ்மையிலாப்புலத்தியனே சொல்லக்கேளு - கேசரியின்வித்தைதனை யார்தாஞ்சொல்வார், ஆழ்கடல்சூழவனிமிசைக் குக்கல்போல-வாடுமாடுகள்போலத் திரிவாரல்லால், காழறிவாலண்டமெனுங்கல்லைக்காணார்-கழறும்வெள்ளைக்கல்லதனைக் காண்பார்கொல்லோ. (௪)

காணுதபிண்டமெனுங் கல்லையந்தக்- கருவறியாமதியிலிகள் காணமாட்டார், கோணுதவுருவதுவு முருவாருபங்-குறும்பரோவறிவார்களறியமாட்டார், ஆணுயருபமதோகோடாகோடி-யாயிரத்தெண்கலையிலோ ரண்டசோதி, ஏணுருங்கருவதுவோ பிண்டாபிண்ட-மிப்புவியின்மாந்தருக்குச் சாராதன்றே. (௫)

சாருமேசற்குருவாஞ் சகலத்துக்குஞ்- சதுர்வேததீட்சைகுரு சொல்லவேண்டும், சீரியசற்குருவையடுத்தன்புசெய்து- செகற்குருவின்வாக்கியத்தைச்சோதித்தேறு, ஓரிய லுமில்லாதபாவிகட்கே யோதுவரோவொருநாளுமோதார்சற்றும், ஏரியல்சற்குருவையடுத்தன்புசெய்தேனியம்பிமோர்பன் னிரண்டாண்டளவுந்தானே

பூரணவழலை.

தானேதானண்டமதுதெரிந்தாலன்று- தானன்றேசிவசித்தன்ஞானியாவான், பானேதான்பரப்பிரமமதுவேயாச்சு-பராபரமாம்பரவெளியு மதுவேயாச்சு, கானேதான்கருவிகரணுதியாச்சு கருவுதித்தபிண்டமெனுங் கல்லுப்பாச்சு, வேனேதான்விந்துவுக்குநாதமாச்சு-விந்துசத்தியுப்பாச்சு வீரமாச்சே. (எ)

ஆச்சுதேயண்டசத்தி சிவமுமாச்சு-தாதியாநாதவிந்திரண்டுமாச்சு, போச்சுதேபூரணமு மிதுவேயாச்சு -பூரணமாமெழுத்ததுவு மிதுவேயாச்சு, வாய்ச்சுதப்பாவழலைக்கே ராதியாச்சு-வளமானமுப்பூவு மிதுவேயாச்சு, தாட்சியிலாச்சாதியென்றபிறவியாச்சு-சதகோடிவித்தையெல்லா மிதற்குள்ளாச்சே. (அ)

உள்ளானவடிமூல மிதுவேயாச்சு-தோங்கார முடிமூலமிது வேயாச்சு, விள்ளொணுசுழிமூல மிதுவேயாச்சு - விரிமூலாதார மென்றசாரமாச்சு,கள்ளானசிவசத்திமூலமாச்சு-காரத்தின்சவர்க் காரவுப்பதாச்சு, அள்ளானவாதாரவண்டமாச்சு - தடிமுடியைய றிந்தவனே யாசானுமே. (கூ)

பூமிநாதபிண்டம்.

ஆசானும்பூமியுடைநாதநாத - மப்பூவிற்முனிருந்த வண்ட பிண்டம்,தேசானும்பூமியுடைவன்னங்கண்டு-தெளிவானபங்குனி சித் திரையைக்கண்டு, கோசானும்பூருவ பற்பினியாஞ்சோதி- கோமேதவிரத்தினம்போ லுதித்தாள்பாரு, காசானுமண்டலத் திற் பிண்டமாச்சு - கருவிகரணாதிகளு மிதற்குள்ளாச்சே. (ய)

ஆச்சுதேயண்ட சராசரத்தின்பிண்ட - மாகாசமென்றுசொல்லுகி றேனுதியாதி, போச்சுதேயைஞ்சுதிங்க ளானபிண்டம் - பொரு ளானவண்டத்தின் கல்லைவாங்கி, நாச்சுதேநாதசத்தி விந்தெடுத்து நவிலுகிறேன் பாண்டத்தினன்றுய்ப்போடு, வேச்சுதேவேல்விழி யாணுதந்தன்னை-விளங்கிரத்தினபாண்டத்தி லிட்டிடாயே. (யக)

இட்டிடுவாய்வெவ்வேறே பாண்டந்தன்னி- லென்மகனேத வறுதே யின்னுங்கேளு, முட்டிடுவாய் முன்சொன்ன சிவத்தினு ப்பை- முறையாகச்சொன்னேனிரண்டாங்காண்டத்தில் நட்டிடு வாய்பணவெடைதா னெடுத்துமைந்தா - நாதசத்திவிந்திலிடவ முதமாமே,அட்டிடுவாயமுதசத்தி யண்டத்தோடே-யழகானநா தநீர் கூடச்சேரே. (யஉ)

கைபாகசெய்பாகங்கள்.

சேர்த்திடுவாயிரண்டையுந்தாமொன்றச்சேர்த்துச்-சீராகக் கல்வத்திலிட்டுமைந்தா, ஆர்த்திடுவாயமுதமென்ற குழவிகொண் டே-யாட்டிடுவாய்குருசலத்தை மூன்றுசாமம், ※ ஓர்த்திடுவாய் பராபரியைத் தியானஞ்செய்தே - யோமென்றமந்திரத்தாலாட் டிப்பாரு, ✱ கூர்த்திடுவாய்மூன்றுநாள் மூன்றுசாமங் - குணமா கவாட்டிடுவாய் கருப்போலாமே. (யங)

ஆமேதான்கருத்திரண்டுருவாக்காணு - மைஞ்சுதிங்கட்பிண் டமென்று மிதற்குப்பேரு, தேமேமூன்றாங்காண்டத் தெடை பாகந்தான்-றெரிவருபஞ்சீகரண தீட்சைசொன்னேன், கோமே வுபஞ் சகர்த்தர்திட்சையாலே - கொடுமைசெறியையம்பூதக்கல்லு மாச்சு, காமேவுமிக்குருவைக் கலக்கிநீரிற் - கண்மணியேதெளிய வைத் திறுத்துக்கொள்ளே. (யச)

---

※ ஓர்ந்திடுவாய் ✱ கூர்ந்திடுவாய் - என்பன - ஓர்த்திடுவாய் கூர்த்திடுவாய்-எனவிகாரப்பட்டன.

கொள்ளவென்று லிக்குருவை யெடுத்துக்கொண்டு- குருவாகப்பாவித்தே யடுப்பிலேற்றிக், கொள்ளவென்று லிக்குருவைக்கு முக்காச்சிக்-குருவானகுருசெய நீ ரிறக்கிக்கொண்டு, அள்ளவென்றுலாறவிட்டுக் குருநீர்விட்டே - யரகராதெளியவைத் தெடுத்துப் பாரு,மொள்ளவென்றுன் முத்துப்போற் கண்விட்டாடு- முனியுனைத்தவாலேரச மென்றுபேரே. (௰௫)

பேரானவிச்சலத்தின் றெளிவிறுத்தாற்-பேரொளியாம்பரப்பிரம பிண்டங்காணும், காரானகதிர்போலேயுருவங்காணுங்-காயவைப்பாய்ரவிதனிலே குருவைக்கொண்டு,சீராகவுலறவைத்தவமுதத்தாலே-திறமாகவிக்கருவைச் சுழற்றிடாய்நீ. ஆராய்நீவமுதசுத்தி யிரண்டதாச்சு-தடைவானவூசிநீ ரிதற்குப்பேரே. (௰௬)

பேரொன்றவிக்கருவைத் தெளியவைத்தாற் பெலமானவமுதமையாமூன்றுஞ்சுத்தி,காரொன்றகருவதுவுமிரவிதன்னிற் -கணக்காகக்காய்ந்ததேற்கசிவற்றுப்போம், வாரொன்றமாக்கருவையெடுத்துக்கொண்டு-மகத்தானவூசிநீர்தன்னிலிட்டுத், தேரொன்றுதெளியவைத் தெடுத்துக்கொண்டு-சீரானவிரவிதனில்வைத்திடாயே.()

வைத்தவிந்தக்கருவிரவிதன்னிற்காய்ந்தால்-வழுத்தரியவுரோமநீர் மகத்துவத்தால்,கைத்திடுமக்கசிவெல்லாமிறங்கும்பாரு-கற்றவர்களறைதருமோரண்டவுப்பில்,வைத்திடுவாயெனிலாகுநாலாஞ்சுத்தி-வண்மையாக்கருவெடுத்து ரோமநீரில், ஐந்தாகச்சுழற்றியே யிறுத்துக்கொண்டே-யதிலிறங்குமமுதமன்றோதேசிநீரே )

நீரானகருவதுவும் ரவியிற்காய்ந்தா-னிகழ்ந்திடுமோர்தேசிநீரொன்றேபேராம்,காரானகருவதுநாலாங்காண்டத்திற்-கருமூன்றுங்காண்டத்திற் குகையின்சுன்னம், ஆரானவஞ்சுதிங்கட் பிண்டமாச்சு-தழகானகருச்சுன்னத் தறிந்துகொண்டு, சீரானகருவென்ன வென்றுலையா-தேசிநீரமுதத்தைக்கருவில்விட்டே. (௰௯)

விட்டதனைச்சுழற்றியே தெளியவைத்தால்-விஞ்சைம்மூலமிறங்குமிறுத்துக்கொண்டு,திட்டமாக்குணமுடையோய்மாசிலாத-சீசாவிலேயநீபதனம்பண்ணு முட்டிலாப்பிண்டகருவெடுத்துக்கொண்டு-மொழிவரியவிரவிதனிற்காயவைக்கின்,விட்டோடுங்கசிவெல்லா மற்றபின்பு-விளங்குமந்தவுப்புமிகப் படருமன்றே. ()

சத்தியுப்பு- - சிவவுப்பு.

படருமேயிம்முறையா ரவியிற்காய்ந்தாற்- பத்தானநாதசுத்திபரத்தோடொக்கும், அடருமேசிவசத்தியிதுவேயாகு - மரகராவைம்மூல மிதுவேயாகும், இடரிலாவிந்தவுப்புச் சத்திசொன்ன-னென்மகனேயான்கண்டே யுனக்குச்சொன்னேன்,படருமிந்தவுப்பினது வன்னமையா பகரரிய வெள்ளையது சொல்லப்போமோ. (உக)

சொல்லமுடியாதவெடி யுப்பதாச்சு-துகளிலந்த வுப்பினிறமி
ன்னுங்கேளு-நல்லகுணமுடையபுலத்தியனேசுத்த-நற்பளிங்குச்
சுன்னம்போ லிருக்கும்வெண்மை,புல்லுபூரணமதிபோலிருக்கு
ம்பாரு-புகலரியவுப்பினது காரசாரம்,மல்லன்மிகுமரத்திலொரு
தொளையிட்டந்த-மகத்தானவுப்பதனைப்பணம்போல்வையே. ()

வைத்தாயேபரிட்சைசெய்து பாருபாரு-வழுத்துமொருவா
ரமதிற்பட்டுப்போகும்,பத்தியாவிதின்செய்தியின்னுங்கேளு -ப
தனமாவுப்பினது முறைமையைமுன்னேகத்தலறவாதிகட்குச்சொ
ன்னேனன்று-கனமான்சிவசத்தி மகிமையாலே,உத்தமனே நூற்
கெல்லாமாதியாக-வுற்றவிந்நூல்போலேயொருநூலுண்டோ. ()

இந்நூல்போலெந்நூலுமில்லையெங்கு-மிந்நூலேயெந்நூற்கு
ங் குருநூலாகும், அந்நூல்போலெந்நூலார்சொல்லவல்லா-ராதி
யெனுஞ்சோதியையாபரமாஞ்சோதி, மைந்தனேயிம்மூன்றுங்
கூடினக்கால்-மகத்தானமுப்பூவுமிதுவாம்பாராய், என்றனையெ
ட்டிரண்டும் பத்தேயாகு-மிதனாலேசாபமது நீங்கிப்போமே.()

சாப நீக்கல்.

நீக்கியேதென்மேற்குச்சிவந்தபூமி-நேராகவமைந்தநீசென்றே
யன்பா, நோக்கவேவேண்டுமென்றூர்சொல்லக்கேளு, நுவலரிய
வென்னுடையதியானங்கண்டு, போக்கியபோகாதே நினைவாய்க்
கொண்டு -புகழுடையவிந்தரகிரி தனைநேர்கண்ட, * எக்கிநீயலை
யாதேயின்னுங்கேளா-யென்மகனே சித்திரையாமாதந்தானே()

பந்தர் ஓமகுண்டம்.

மாதமென்றுவாடாதேபதினைந்துக்கு-மகத்தானவுத்திரமெ
ன்றுரைசெய்நாளில். நாதமென்றபூருவமாம்பட்சந்தன்னி -னன்
மைபெறுசுக்கிரனுங் கூடும்போது,வேதமெனும்விலாசத்தின்பூ
மிகண்டு-வேகமுள்ள மேல்காற்றுவீசுங்காலை,பாதமென்றபந்தர
து பச்சைப்பந்தர்-பரிவாகமேடையுயர் வாகப்போடே. (௨௬)

உயர்வாகமேடையிட்டோமகுண்டத்-தொளிர்பக்கநான்கினு
மோர் வாயில்கோலி,அயர்வறவக்குண்டத்தீரைந்துநாளு-மண்ட
வாகத்தீட்சைமந் திரஞ்செபித்தே, நயமாகச்சலமதனை யதனுள்
வார்க்கி-னன்றாகப்பூபூத்துச்சொரியும்பாரு, மயலறவே மீங்கா
னிற்கொண்டுவந்து-வண்மையுடனிரட்டிப்பாவதனுட்போடே.(

கங்கைச்சமாதி திட்சை.

போட்டுபஞ்சவமுததனை யதனுள்வார்த்துப்-புகல்பத்துக்
கொன்றேயா காசமீசம், நீட்டியம்மேடைக்கு நடுவேவமைந்த-

---

* ஏங்கியென்பது-எக்கியெனஎதுகைநோக்கிவிகாரப்பட்டது.

நினைவாகச்சமாதியிலுப் பெடுத்துவையே, தாட்டிகமாச் சொ
ல்லி விட்டே னொளிக்க வில்லை - சாற்றரிய வப்பந்தர் தனக்கு
நாப்பண், கோட்டமறப்பளிவிழமப் யதத்திலை வத்துக்-குழிவெ
ட்டிப்பூமிக்குண் மூடிப்போடே. (௨௮)

மூடியேயயன்பாகக்காலைமாலை-மொழிவரியசத்திசிவதீட்சை
யோது, பாடுவாய்தீட்சை யொருமண்டலத்தான் - பத்திமையா
விருந்துகொண்டதனையோது, நீடியவோர்மண்டலத்திலண்டபி
ண்ட- நிகழ்த்தரிய பூவதுதான் பூக்கும்பாரு, வாடியேயிலைதவிட்
டுப்பூநீர்தேடி-வகையிதுவாமென்றெண்ணிக காச்சினாரே. (௨௯)

உலகவாதிகளின்குணம்.

காய்ச்சினாலண்டபிண்ட மாகுமோதான்-கண்கெட்டமடை
யர்களே காரமாமோ, ஆச்சென்றவுப்புத்தான் பூத்தபூவா-மைந்
நூற்றிற்காப்பாதி கடையும்பாரு, பாய்ச்சுகையிற்பழமாகு மண்
டலத்திற்-பயனறிந்துபற்பிணியின் றீட்சையோதின், எச்சிலாக்க
டினமதா யெச்சரிக்கையிடறுவந்தணுகாமற் றீட்சையோதே. ()

தீட்சையைநீமறந்துவிட்டாற் சவமாய்ப்போவாய் -செகற்
குருவின்சாபமது பலியாதையா, நீட்டியாம் வெகுகடினம்பெ
ரியோர்தம்மை-நேசித்தேயவர்கண்மன திரங்கச்செய்தே, ஆட்சி
யாக்கைபாகந்தீட்சைபாக-மடைவாகவவருணர்த்த வறிந்துகொ
ள்ளு தாட்சியிலாப்பரிபாடை பிரமகற்பந்-தனங்கோடிகொடுத்
தாலுஞ் சொல்லாரன்றே. (௩௧)

பிரமகற்பம்.

சொல்லாதபொருளையா பிரமகற்பஞ்-சொல்லாமன்மறை
த்தார்கள் சித்தர்தாமும், கொல்லாமற்கொல்லுமையா வெளிவி
டாதே - கோதையர்களாசையிலே சிக்கிடாதே பொல்லாதபொ
ருளதுகைக் கொண்டாயானாற்-புகலரியபிரமலபி தவறிப்போகு
ம், வெல்லாமல்வெல்லுமந்த தீட்சைகண்டால் - வெகுகோடிவித்
தையெலா மாடலாமே. (௩௨)

ஆடலாமப்பதுவு மூப்பதாச்சு - தராகராவுப்பதுவு மூப்பூ
வாச்சு, பூநிலாமதிற்பிறந்தபிண்டமாச்சு-பிண்டத்திலண்டமெனு
மமுதமாச்சு, பாடலாம்பாலமுதமதுவேயாச்சு - பகர்மூலமெ
ஃமோ னாந்துமாச்சு, காடெலாங்காயமெனு மைங்காயத்தைக்
காணாமன்மானிடர்கள் கலங்கினாரே. (௩௩)

கலங்காமலென்மகனேயன்பாக்கேளு-காயமெனு மைங்கா
யம்பதனம்பண்ணு, மயங்காதேமௌனமெனு மைங்காயந்தான்
மகத்தானமாரணத்துக்காதிபீடம், தியங்காமற்சீசாவிலடைத்துக்

கொண்டுதீதிலாப்பேழையிலேபதனம்பண்ணு, வயங்குகின்றவெ
ன்மகனேவாரந்தோறும்-வண்மையாச்சற்குருவைப்பூசிப்பாயே

பூசிப்பாய்நாடோறும்பூசித்தக்காற்-புகழானமாந்த்ரீகமித
னூலாமே, யாசிப்பாய்சித்துகளிலனேகஞ்சித்தா-மறுபத்துநாலு
சித்துமிதனூலாடும், நேசிப்பாய்நாதர்கடாமறைத்தவெல்லா-நிலை
வரமாவெளியிட்டேன்பண்பாய்ப்பாரு, வாசிப்பாயென்னுடை
யநூல்கடோறு-மறைத்தவெல்லாங்குருவாணை வெளியிடாதே ()

வெளியாகச்சொன்னென்மதி வெண்பாநூறும் - வெகுளா
தேகுருமுறையுஞ் சொன்னேனன்று, அளியோனுடையாயிரமாம்
பெருநூல்சொன்னே-னதற்குமிந்தவைந்நூறுங் குருநூலாகும்,
நளிகடல்சூழ்நாளிலத்தோரறிந்துய்தற்கு-நயமானமுறையதனை
த்துமிந்நூற்குள்ளே, தெளிவாகச்சொன்னேன்பா ராருஞ்சொல்
லார் செப்பரியசித்தருக்குங் குருநூலாமே. (௫௫)

ஆமேதான்சொல்லுகிறேன் வழலையாதி - யாருக்கும்வெளி
விடாதடக்கம்பண்ணு, பாமேதான்பாலுக்குக்குருவாமொருபா
லித்தவண்டமதை யெடுத்துக்கொண்டு,காமேதான்கல்வத்திலண்
டமிட்டுக்-கருவானவம்மூலமதனில்விட்டு,வாமேதான்வண்மை
யுள்ள குழவிகொண்டு-வளமாகவிருசாம மாட்டுவாயே. (௫௭)

ஆட்டுவாய்மெழுகாக விருக்கும்பாரு-வையனே மெழுகெ
டுத்துக்குகைபோற்பண்ணு, தேட்டமாவிரவிதனிற் காயவைத்து
ச்-செயமானகுகையெடுத்து வைத்துக்கொள்ளு, கோட்டமிலா
ப்புலத்தியனே கூறவொண்ணுக் - குருவானமுப்பூவைக்கூறக்கே
ளு, தாட்கமாக்குகையெடுத்த தனிலந்தச் - சாற்றரிய முப்பூவை
ட்போட்டிடாயே. (௫௮)

போட்டிடுவாய் பற்பனியினுப்பைப்போட்டாற் - புகழா
கவுருகியது மணியாமைந்தா , தேட்டமாக் குகைதனிலே மணி
யைப்போட்டுத் - தெளிவானமெழுகதனால்வாயைமூடி,மூட்டிடு
வாய்குருநூலைம்பதிலேசொன்ன-முறைப்படியேயெருவடுக்கிப்
புடத்திற்போடு, மாட்டிடுவாய்கெசபுடத்திற் போட்டாயாகின் -
மகத்தானசுன்னமதா மென்சொல்வேனே. (௫௯)

குருநூலைம்பது-மதிவெண்பா-நந்தீசர்நிகண்டு.

என்மகனேகுருநூலைம் பதினிற்சொன்னே- னெடுத்துமுப்
பூபரிபாடைதன்னிற்சொன்னேனன், றுன்னுநந்தீசர்நிகண்டாமுந்
நூற்றிற்-செப்பினார்சிறிதுசிறி தன்பாயானும், பன்னருமிந்நூலி
ற் கைபாகத்தோடு-பண்புடனே சொல்லிவைத்தேன் றீட்சையா
கும், நன்னயமாமிந்நூலில் வாதஞ்சித்தி-நவில்வாதி கட்கிந்நூல்
பொய்க்காதன்றே. (௬௰)

அறைவரியகுருசுன்ன முடிந்துபோச்சு-தையனே பூசித்து
த்தரிசிப்பாய்நீ, மறுவறுசீர்க்குமரியெனும் வாலைப்பெண்ணை-வ
ளமாகப்பூசைசெய்து வைத்துக்கொள்ளே,துறையறிந்தவேதாந்
தகுருவின்வாக்யஞ்-சொல்லாதேகண்மணியேவிடக்கலைத்தான்
மறைபொருளா வெண்ணாது வெளிவிட்டக்கான் - மைந்தனேத
லைவெடித்துச் சாவாய்பாரே. (சக)

விடக்கல்.

பாராருமிக்கல்லுக்கடுத்தகோவை - பாடினேனையாயிரத்தி
ற்செப்பவொண்ணுச், சீராரும்விடக்கல்வேதாந்தநூலிற்-செப்ப
வில்லையொளித்திட்டாரதனாலேதான், பேராரு மகிதலத்தில்வாத
மெல்லாம் - பேய்மகனேவீணாகப்பொய்த்துப்போச்சு,தோராக
வென்றனு வியம்புங்கல்லை-யினிதாயான் சொன்னுற்போ லெவர்
சொல்வாரே. (சஉ)

சொல்லரியவிந்நூலைந்தாங்காண்டத்திற் - சொல்லியவக்கரு
வையெலாஞ்சொல்லக்கேளு,நல்லவொருபற்பினியின்முடிதான்
கொண்டு-நற்பணையாம்பாடாணமண்டத்தோடு, சொல்லரியகல்
வத்திறுன்குமிட்டுச்-சுடரிரத்னவிந்ததினுன் மெழுகாவாட்டு, வல்
லமையாவழித்தெடுத்து வில்லைசெய்து - மகத்தான ரவிதனிலே
வைத்திடாயே. (சங)

வைத்திடுவாயிரவிதனிலெட்டுசாமம்-வண்மையுடன்காயவைத்
தெடுத்துக்கொண்டு,புத்தியொடுசிந்தூரத்தின்பட்டைகொண்டுபு
கழாகக்கோழியென்றபுடத்தைப்போடே, எய்த்திடாதெழுபுகை
போய்மறையநன்று-விடைவிடாதேவிசிறியாலேவீசுபத்தியொ
டுதீயவிந்தபிறகுபார்க்கிற் பரனருளால் விடசுன்னம் பிறக்குந்
தானே. (சச)

தானென்றசுன்னத்தையெடுத்துப்பார்த்தாற்-சந்திரன்போ
ற்சுடர்விட்டுப்பிரகாசிக்கும், மாறென்றசுன்னத்தி லெடைவிராக
ன்-மாட்டிடுவாய்பனிநீர்போற் றெளிந்துபோகும், ஊனமறமு
ன்சொன்னமுறைதானையா- வோரையமில்லை யிரண்டைச்சரியாக்
கொண்டு, கோனென்றசுத்தசலந்தன்னிற்போட்டாற்-கொதித்து
டனேதெளியுங்கா ணின்னுங்கேளே. (சரு)

கேசரக் குளிகை.

கேளையாவிம்முறையையெவர்தாஞ்செய்வார்-கேசரத்தின்
வாலைரசமிதனுற்கட்டு, ஆளையாவறுபத்துநான்குஞ்சித்தி-யண்ட
சத்தசாகரமுமிதனுற்சித்தி, காளையாகரீபங்களிதனுற்சித்தி - கால
கொடுவிடளிஃது கண்டுகொள்ளே, மாளுமையா மகத்தானசரக்
கெல்லாந்தா-மாண்டிடுமேவிடம்பட்டா லுடனேமாதோ.(சகூ)

மாதர்மயலற்றபுலத்தியனேகேளு-மகிமைநிறைவிடக்கல்லை
நூல்கடோறும்,கோதறுசீர்ச்சித்தரெலாமறைத்துச்சொன்னூர்கு

ணமாகயானதனை வெளியாச்சொன்னேன், எதமிலாப்புகழுடைய ந
ந்திசராணை-யினிதாகவறிந்துகொண்மைய லுருதே, ஆதரவாப்பிறை
முடித்தலைவயன் மேரு - எறைந்திட்ட படியானு மறைந்திட்
டேனே. (௪௭)

அறைந்திட்டேனென்றன்மேலாணையாணை-யாருக்குமிம்மு
றையைச்சொல்லவேண்டாம், விரைந்திட்டே னிம்முறையின்றீட்
சைமார்க்கம்-வேதாந்தமைந் நூற்றைப்பதனம்பண்ணு, கரைந்தி
ட்டேனிந்நூலை வெளிவிடாதே-காசினியின்மானிடர்க்குக்காட்ட
வேண்டாம், நிறைந்திட்டேனிந்நூலைந்தாங்காண்டத்திற்- றேயத்
திற்கிடையாதுபதனம்பண்ணே. (௪௮)

பதனமிகுவெகுபதன மைஞ்சாங்காண்டம்- படிப்படியா
ய்ச்சொல்லிவைத்தேன்முப்பூமார்க்கம். அதிநலமா மென்பாடன்
மூன்றுலட்சத்-தன்றிமற்றெவற்றிலுமிம் முறையோவில்லை, சதம
தொருசிறிதுமிலாப்பதினெண்பேருங்- கபடமதாச்சொல்லிவை
த்தார்நூல்கடோறும், அதிகமிஃதாயிரத்தெட்டண்டத்திற்கு-மதி
கமைந்தாங்காண்டமோ வதிகங்காணே. (௪௯)

காண்டகுநற்குணமுடையாயன்பின்மிக்காய் - கல்வியறிவு
டையாய்கண்மணியேகேளாய், மாண்டபுகழகத்தியன்வாக்கமுத
வர்க்கா-மாசிலையாயிரத்தினுக் கீதுயிராய்பாரு, வேண்டுமெனில்
வேதாந்தசுருக்கம்பாரு-மேதகுமைந்தாங்காண்டச் செல்யுநூற்
றில், தோண்டருமோர்நெறியகன்று குருவைக்கண்டு-குகையில்
வந்துசிவயோகக் கற்பமுண்ணே. (௫௰)

கற்பக்கரு.

கற்பமதுவாதத்தின்குருதானையா - கபடமாவிலைகற்பமென்று
சொன்னார், அற்பமாமஃதாகாதொருநாளேனு-மையையோவுன்
னுயிர்தான்மாயுங்காணே, கற்பமதுதீட்சைசெய்த வாமப்பாலைக்
கண்டுகுருவென்றுசொல்லிப்பணம்போற்கொள்ளு, விற்பனமா
நீதானோர் மண்டலத்துன் - மேன்மைபெறுகாமப்பாற் றீட்சை
கொள்ளே. (௫௧)

கொள்ளுமறுமண்டலத்திற் பனிநீர்கொள்ளு- கொடுங்கார
மெத்தவையா வனுப்போற்கொள்ளு, அள்ளையாகற்பங்கா யாதி
சொள்ளு-வதன்பினர்ப்பஞ் சீகரணமுடிவுகாணும், வெள்ளையா
வைஞ்சுகற்பமுடிந்துபோச்சு-வெளியிலுனை யெவர்காணப்போ
கிறார்கள், நில்லையாகோடியுகம்வாழலாகு - நிமிடத்திற்கெவனத்தி
ற்காணலாமே. (௫௨)

காணப்பாதத்துவங்கடொண்ணூற்றாறும்- கண்மணியேசபை
யாருங்காண்பாரையா, மாணப்பாவாதமென்றகருவைக்கண்டால்
வாதபித்தசிலேத்துமத்தைமடித்துக்கொள்வாய், ஏணப்பாவெட்
டிரண்டும்பத்துங்காண்பா, நிருப்பாமோகோடியுகமெனைப்போல்

வாழ்வார், வேணப்பாவைபகத்தின் மாண்பர்கூடி வேதமென்ற சாத்திரத்தை வெளிவிட்டாரே. (ருரு)

விட்டாரேசித்தர்கடாஞ்சொன்ன நூலில் - விவேகத்தாலடக் காமல்வேடம்பூண்டார் - கெட்டாரேயவர்கொடிய மனத்தினாலே கேடுகெட்டசண்டாளர் கூட்டங்கூடி, தொட்டாரேவழலையென் றவாதியாதி - தொடுத்தாரேசரிலையயில்வாழ்பவனையெல்லாம், விட் டாரேயவர்பொருளைநாசமாக்கி - வெற்றோடுகையிற் கொடுத்து விடுவார்பாரே. (ருச)

விடுவார்களவர்மனது நொந்ததானால் - விளங்குவரோவொ ருக்காலும் விளங்கார்மேலும், கொடுநோயாங்குட்டமொடு பா ண்டுரோகங் - கொண்டலைவானென்பதற்கோ ஐயமில்லை, கெடு வார்கள் கன்மகாண்டத்திற் சொன்ன - கிரியைகளைச் செய்தாலு முய்யமாட்டார், படிமீதிற்பொய்வேடம் பூண்டோர்க் கிந்நூல் பகரவிலைசிவயோகிக்காகுமன்றே. (ருரு)

துலராசி.

யோகியென்றபேர்படைத்தோ னுலகிலைய - வொருகோடி மாந்தர்களி லொருவனுண்டு, தேகியென்றபெயரதுதா னவற் கேசெல்லுஞ் - செடத்திலுள்ள கூறதுவு மவற்கேதோன்றும், சோகமிலாயோகிகட்கே யிராசிக்கூறு - சொல்லரியவிட்டகுறை புத்திநுட்பம், ஊகிக்கிற்றுலராசிசென்மக்கூறங் - குதிக்கும்போ தவற்கிவைகள் பூர்வமாமே. (ருசா)

பூர்வமாமொன்பதற்குளெய்தவொண்ணாப் - புகழ்படைத்த பூர்வமெய்ஞ் ஞானந்தன்னால், பூர்வத்தால்வயிற்றிலவனுதிக்குநா ளிற் - புகலரியபராபரத்தைப் பணிந்தேபோற்றும், கூர்மையாப் பராபரனை யன்புகொண்டு - கூறுமனக்கண்ணாலே யொட்டிப்பா ர்க்கும், சீர்நோக்கிற்செயகம்பம் பரத்தினேர்மை - சிவசிவாபால கற்குத் தெரியும்பாரே. (ருஎ)

தெரியும்பார்செயகம்பம் பரத்தினேர்மை - தேனமுதமத னப்பால் சிறந்தேபாயும், அறியவந்தப்பாலகனுமொழிதற்கொ ண்ணா - வமுதத்தையடுத்துவாய் மடுக்குநாளும், பரிவாகவமுதத் தை யடுத்துண்டக்காற் - பரிபாடைபதினெட்டும் பண்பாப்பே சும், துருவமாந்துலாராசி பூர்வஞானம் - தொடர்ந்து வரும்விடா வைய சொன்னேன்பாரே. (ருஅ)

மச்சரேகைமுதலியன.

சொன்னவொருபத்துக்கு ணிராதாரத்தின் - சொல்லரியமவு னமையா வபானவாயு, அன்னைமிக வலக்கணுற துறைந்துதள்ள - வரனருளாற்பாலகனு மவனிமீதில், சொன்னவிக்கிரகம் போல்வ

ந்துதோன்றுந்-துகளறுசி ரம்மகவின்கருக்கூறைய, என்னென்று
சொல்லுவன்யா னியம்பவொண்ணு-திடம்வலமா விரேகையொ
ன்றிருக்குந்தானே. (௫௯)

தானென்றபாலகற்கு முதுகின்மச்சஞ் - சாற்றுதனரேகை
நெற்றிதன்னிற்சுக்ரன், பூனென்றவிருபுறமுஞ் சக்கரந்தான்-புக
ழ்பெரியமார்புதனிற்பிறைபோன்மச்சம்,வானென்ற வுண்ணாக்கி
ன்மவுனரேகை-வளர்பிறைபோற்றானிருக்கு மைந்தாகேளு,கோ
னென்ற வமரர்குரு வியாழன்றானும்-கூறரியசுக்கிரனும்பார்வை
யாமே. (௬௰)

ஆமதுதானடுநாவிலமுதகங்கை - யரகராபரத்தினுடை மகி
மையாலே, போமதுதானுண்ணாவி லமுதசத்தி- புகழ்பெரியபா
லனுக்கு மவுனஞ்சொல்வாள் , வாமமிகுவாமிசிவகாமரூபி-மை
ந்தனுக்கோருபதேச மளிப்பாள்பாரு, தேமதுதான் மவுனசிவ
யோகராசி-தெளிவாகசித்திக்கு முண்மைமாதோ (௬௧)

சித்திக்குஞ்செகராசி யிதுதானையா-செகத்குருவாவான்சித்
தனுவான்பாரு, அந்திக்குமைஞ்சுவயதாலைய-வன்றன்றே வகத்தீ
சர்மவுனஞ்சொல்வார்முத்திக்கேயருகனும்படிச்செய்திட்டுமோ
னநிலைபெறுதற்கு மூலஞ்சொல்வேன்,பத்திக்கோர்வித்தெனுமீ
ரொன்பான் சித்தர் , பாலிப்பா தியானத்தாற் சொலிப்பாய்
மன்னே. (௬௨)

சொலித்திட்வேயோகமொடு ஞானஞ்சொல்வார் - சொற்
பெரியயோகசிவ மவுனஞ்சொல்வார், கெலித்திடவேசித்தர் தம
க்கடையாளம்பார்-கிருபையுடன்யான் சொன்னே னறிந்துகொ
ள்ளு, பலித்திடவேபரிபாடைத் தியானஞ்சொல்வார்-பஞ்சபட்
சிதாமொடுங்குஞ் சபையுஞ்சொல்வார், அனுத்துவிடேல்வழுத்த
ரியவாதஞ்சித்தி-யதையறியப்பலரிங்கே யலைவராமே. (௬௩)

புத்திகெட்டவாதி.

ஆமேயிவ்வையகத்தேமடையர்கூடி - யலைந்தலைந்துசுட்ட
திலாவதென்ன, போமேதான்புகையெழும்பி மேகம்போலப்
பொருமியேகண்கெட்டுப்போவார்பாரு, வாமேதான்வாய்புலம்
பிமடையரெல்லாம்-வாதமதுபலிக்குமென்றே பொருள்கடோ
ற்றுக், காமேதான்கடைசரக்கைச் சுட்டுக்சுட்டுக் - கருவறிந்தயோ
கியைப்போற் கண்கெட்டாரே. (௬௪)

கருவென்னகுருவென்ன விராசியோர்க்குக்-கண்ணாடிமுகம்
போலே காணும்பாரு, பருவென்ன திருவன்ன துலராசிக்குப்
பாத்திரராமவர்பெருமை சொல்லப்போமோ , புருவென்னபுக
ழென்னசொரூபஞ்சித்தி-புகழ்பெரியவிடக்கல்லிற் பலிக்கும்வா
தம், வருமென்னவகையென்ன தொகைதானென்ன-வழுத்தைதந்
தாங்காண்டத்து மறைப்பிராதே. (௬௫)

மறையாமற்சொல்லுகிறேன் மைந்தாகேளு-மகத்தானபரி பாடையில்லாமற்றான், குறையாமற்சொல்லுகிறே னன்புகொண்டு-கோடான கோடிவித்தையினிமேற்பாரு, அறையாமலறையையாயிரத்துச்சொச்ச - மாயிரத்தெட் டிதழப்பா னவஞ்சாங் காண்டத், துறையிலோர்துறையறிந்து துருவங்கண்டு- துருவத்தின்மேலேறிக் கருக்கண்டேனே. (சுசு)

பராபரதீட்சை.

கருவானபொருளையா மூலாதாரங்-கருவறிந்த மூலத்தின் மேலாதாரம், அருளானவருளையா வாதாரத்தை-யறிவாலேயறிந்தெனிரா தாரமூலம், குருவானவிருளையா பராபரத்தின் - குணமானவெளியையா நாதவிந்து, தருளானதருளையாசபைதாணுகுஞ்-சமரசத்தின்மூலமையா வாறுமாச்சே. (சுஎ)

நிராதாரதீட்சை.

ஆறுமேமவுனசிவ யோகதீட்சை-யையனே வறைந்திட்டேனுர்தாஞ்சொல்வார், பாறுமேபராபரத்தின் தீட்சையாச்சு-பாடுகிறேனிராதாரதீட்சைகேளு, நீறுமேநிராதார மகத்தாந்தீட்சை-தினைவோடுகேட்டிடுவாய் நேர்மையாக, ஆறுமேஅகாரமதுஉகாரங்கொண்டே-யரகராய வசிமநஅரஹாமென்னே. (சுஅ)

நிர்க்குணதீட்சை.

ஓமதுதானிராதாரதீட்சையாச்சு-தோகோகோ நிர்குணத்தின் தீட்சைகேளு, வாமமதுவகாரமுடன் யகாரங்கொண்டு- மாட்டுகிறேன்யவசிநம அரஊமென்று, நாமமதுசொன்னேனிர்க்குணத்தின்தீட்சை-நன்றாகமுப்பூவின் தீட்சையாகும், நேமமதா நிர்க்குணத்தின் தீட்சையாச்சு-நின்மலமாந்தசதீட்சை நேர்மைகேளே.

நின்மலதீட்சை.

நேர்மையாநின்மலத்தின் தீட்சைதன்னை-நேயமொடு சொல்லுகிறே னின்னவாக்கேளு, சீர்மையாஞ்சிகாரத்தி லுகாரந்தானுஞ்சிமநயவஹீம் றீம்சிங்கென்றேயூன்று, நீர்மையா நின்மலத்தின்தீட்சையாச்சு நிகழ்த்தரியசித்தர்களுமிவ்வாறோதார், வார்மையாநின்மலத்தின் தீட்சைசொன்னே மகத்தான பூரணத்தின் மகிமை கேளே. (எ௰)

பூரணதீட்சை.

கேளேநீபூரணத்தின் தீட்சைசொல்வேன் - கேடிலாநாதர்கடாஞ் சப்தகோடி, ஆளேதான்றசதீட்சைபார்த்துத்தேறி-யண்டபகிரண்ட நவகண்டம்பாய்ந்தார், நாளேதானகாரத்தில் உகாரமேறிநயவசிமநறீங்ஸ்ரீங்ஓ மென்றேயூன்று, வாளேதான் பூரணத்தின்தீட்சையாச்சு, வளமானவாதார தீட்சையாமே. (எக)

ஆதாரதீட்சை.

பாராயோவாதார தீட்சைசொல்வேன்-பாலகனேயாதாரதீ
ட்சையையா,மாராயோசிகாரத்தில் உகாரங்காணும்-மநயவசிவங்
சிங்கிறிங்கென்றேயேதாய்,ஆராயோவாதாரதீட்சையாச்சு - தன்
டசத்தசாகரமுமடங்கிப்போச்சு,ஏராயோர் பேரண்டவகண்டம
ட்டு-மேறலாம்வாசிகொண்டு தீட்சைபாரே. (எஉ)

பாரோதானுதாரதீட்சையாச்சு-பகருமொருதீட்சை யிஃதில்
லாவிட்டால்,ஏரோதான்பேராதுமுப்பூத்தானு-மெந்தவிதம்பார்
த்தாலுமனங்கூடாது, ஊரோதானோராகு முப்பூத்தானு-முனைத்
தாரோயவரவர்க டீட்சைதாமும், சீரானசத்திசிவதீட்சைதாமுஞ்-
செப்புவதிற்பயனில்லை நூலைப்பாரே. (எங)

நூல்பார்த்துலலாடமதிலேறிப்பார்த்தே-னுவலரிய பரதரி
சனத்தைக்கண்டேன், கால்பார்த்தேனதற்கப்பால் வாசிகொண்டு
கருத்தோடுபார்க்கையிலேநிராதாரத்தை, நீல்பார்த்துநிராதாரந்
தன்னைக்கண்டு-நேராகப்பூசித்தேனப்பாற்கேளு , வால்பார்த்து
வாசிசிவயோகங்கண்டான்-மகத்தான நிர்க்குணமேபலிதமாமே.

பலிதமென்ற நிகண்டையா வஞ்சாங்காண்டம் - பாடினே
னிந்நூல்போலொருநூலில்லை, பலிதமையாயிரத்திலுக்கோருயி
ராமிந்தப்-பாரதனிலாரறிவா ரிந்நூறன்னை , நலிதராதுளந்தெளி
ந்தமேலோரொல்லா- நவிலருஞ்சீரிந்நூலைக் கைக்கொண்டார்கள்
வலியமனமடக்கிநலோர்க்கடிமைசெய்து - மைந்தனேபன்னிர
ண்டுவருடங்காத்தீர். (எ௫)

கார்த்திருந்தவர்மகிழத் தொண்டுசெய்தாற்-கல்வியறிவதனு
லேகண்டுகொண்டு,ஆர்த்தியொடு நீயாரென்றன்று கேட்டே-யன்
புடையமகனென்றே யறிந்தெடுத்துச் , சேர்த்தணைத் தைந்நூற்
றையெடுத்துக்காட்டிச்-செய்பாகங்கைபாகஞ்சீர்மையாக, வார்
த்தைசொல்லிமெய்ம்மொழியையுபதேசித்து - வைத்திருப்பார்
பக்கத்தின் மனமொன்றுமே. (எசு)

ஆமேதான் முன்சொன்னகருதானைய-வழிவாச்சு தின்னுநீ
சொல்லக்கேளு , காமேதான்கனைத்திறுத்த சலத்தைதயென்றன்-
கண்மணியேபத்துமுறை யமுதசுத்தி , பாமேதான் பாலமுதம்
போலேகாணும் - பாலகனேயமுதத்தையெடுத்துக்கொண்டு வா
மேதானடுப்பேற்றித்தீயைமூட்டி - மைந்தனேகாய வைப்பாய்
சாமந்தானே. (எஎ)

சாமந்தான்காயவைத் திறக்கிப்பார்த்தாற்- சாற்றரிதாய்க்கு
மூம்பதுபோ லிருகும்பாரு, சேமமதாச் சுத்தசலந்தன்னைவார்த்
துத்-தெளியவைத்தான்முத்துப்போற் றெளிந்துகாணும், காமமடி

தாவிரவிதனிற்காயவைப்பாய்-கசிவெல்லாம் போய்ச்சிவந்துகா ட்டுமீண்டும்,பாமமாப்பத்துமுறை ரவியிற்காய்ந்தாற் - படரு மையாவெள்ளைக்கல்லுப்பதாமே. (எஅ)

வெண்சாரையுப்பு.

ஒப்பிலாவுப்பதுவும் பிட்டுப்போலா-மேகோகோவெழும் புமையாசாரைபோல, வெப்பானவுப்பதுவுஞ் சீறுஞ்சீறும்-வெ ண்சாரை யிதற்குப்பேர் விடம்பொல்லாது, தப்பிலாவுப்பினிற மென்னசொல்வேன்-தவளநிறச்சந்திரன்போ லொளிருமையா, செப்பரியசிவவுப்பென்றிதற்குப்பேராஞ்-சீரான பராபரத்தை த்தியானஞ்செய்யே. (எகூ)

பரபூசைமுதலியன.

செய்துபரபூசைகுருபூசைமேலாஞ்-சிற்பரியா மனோகவுரி வாலைபூசை, எய்தரியசத்திசிவபூசைசெய்தே-யேசிலண்டவுப்பெ டுத்தடக்கம்பண்ணு, மெய்யிதுவாஞ்சொல்லிவிட்டே னொளிக்க வில்லை-வேதாந்தசற்குருதன்பாதத்தாணை, நைவரவேவெளியிட்டு ச்சொன்னேனென்று-நாதர்கடாஞ்சாபமதைநாட்டினாரோ. (அ)

நாட்டினார்சாபமதைப்பதினெண்சித்தர்- நவிலரியநற்றவத் துமுனிவர்சாபம், மூட்டினார்சதகோடிசித்தர்சாப-மொழிந்தன ரிந்நூற்கந்தச் சாபந்தன்னை, வீட்டிடுதற்கவரோடே யெதிர்த்தி யானும்விளம்பரியபரனருளா னிவர்த்திசெய்தேன், காட்டினே ரிந்நூலைவெளிவிட்டோர்கள்-காசினியிற்கழுதையாய்ச் சனிப்பா ராமால். (அக)

ஆமேதானின்னுமொரு கருவைக்கேளு-வாகாய நாதசத்தி யுப்பையன்பா,நாமேவச்சொல்லுகிறேனுதரூபி-நாதாந்தசிரோ மணியின்கூற்றைநன்று,வாமேதான் வழலைப்பெண்சோலைக் கன் னிவழுத்தரியபத்துவயதானகன்னி, தேமேவுதேசிகமா மிவடன் பேச்சு-சிவனுடனேகூடிவிளை யாடினாளே. (அஉ)

ஆடினாளன்புடனேதேவதாசி-யமுதமென்ற நாதவிந்திற்கூ டினாள்பார், பாடினாள்பனியென்ற விந்திற்சேர்ந்தாள்-பளிச்செ ன்றுதெளிந்தெழுந்தாள் பரத்தின்றேசி, சாடினாளவள்சென்றுவி ந்திற்சேரச்-சலவடிவாங்கங்கையது பொங்கும்பாரு, வாடினாடெ ளிந்ததண்ணீரமுதமாச்சு-மகத்தானதேசிநீரொன்றும்பேரோ. (அங)

பேரானவச்சலந்தான்றெளிந்ததானற்-பேசுதற்குநாவெழு மோ யாவர்க்கேனும், வீரானவீரியையாவூசிகொண்டு - விட்டக் காலச்சலந்தான் றெளிந்துபோகும், ஆரானவூசிநீ ரமுதமாச்சு- தன்றன்றேதெளிவாச்சு தமுரியாச்சு, காரானதென் றனக்கோரி கட்டிப்பாச்சு-கன்னியென்றவூசிநீரிதற்குப்பேரோ (அச)

இதுவன்றேவெண்மைநிறக்கிளிஞ்சிலண்ட - மிதினுடைய விந்தெடுத்துநாதத்தூட்டி, அதியானவண்டமையா விரண்டாம் வைப்பா-மதினுடையவிந்துநீர்சிளிஞ்சிநீராம்,மதியுடையடவஞ்சி யிவளோசைக்காரி-மயக்கிறளென்றனையுமயங்கினேன்யான்,பதி யானகிரியென்றூர் கிரிதானன்று - பகர்கிரியிலமர்தேசி யண்ட மாமே. (அரு)

## தேசிநீர்.

தேசியென்றூற்றேசியன்றத் தேசியண்டத்-தேசியிவள்குடி யிருப்பு மூன்றும்வைப்பு, பாசியென்றூற்பாசியன்று பாசியண் டம்-பகராதபொருளையாதாலாம்வைப்பு, வாசியென்றூல் வாசி யன்றூசிநீர்தான் - மகத்தான வண்டமையா வைஞ்சாம் வைப்பு வேசியென்றூல்வேசியன்றுகுமரியானுண் - மேலானவண்டமை யா வாறும்வைப்பே. (அசா)

வைப்பானவைப்பொன்றுந் தப்போவில்லை-வயிரமாமுயி ளையா வுரைக்கப்போமோ, உப்பானவுரோமநீரப்பினண்ட-மு டன்சேர்ந்தகருவையா வேழாம்வைப்பு,செப்பரியபொருளிதை யார் செப்பவல்லார் - செயமானகுருவிதுதா னெட்டாம்வைப் பே, அப்பானவப்பதையு மறிந்துகொள்ளு - வடங்காத வண்ட மையா குருநீராமே. (அஎ)

## கம்பியுப்புப்பாறையுப்பு.

குருவானகுருத்திரண்டொன்பதற்குட்-குருநீரைவாங்கியே சுத்திசெய்தால், அருவானகருத்திரண்டு கப்பியாச்சு - ததற்கடி யிற்பாறையெனும் பொருடானுச்சு, பருவமொருபத்துக்குட்ப ருவப்பெண்ணின்-பாலியத்தையென்னலேசொல்லப்போமோ, மருவானமங்கைப்பெண் பெற்றவண்ட-மகத்தான வொன்பதற் குட்பத்துமாச்சே. (அஅ

ஆச்சுதுபாரண்டத்தி னமுரிகங்கை - யடங்காத வச்சவத்தா லமுதசுத்தி, பேச்சிதுபார்பேசாத கருவையெல்லாம்-பேசிவை த்தேனந்நூற்றிற்பெருமையாக, வாச்சுதுபார்மகத்தானபொரு ளையெல்லா-மாட்டினேன்புலத்தியனே யறிந்துகொள்ளு, ஒச்சு துபார்முறைதவறுதின் னுஞ்சொன்னே- னுனக்கெய்துமெய்தரி யமுத்திதானே. (அகூ)

முத்தியென்றவாறேதோ வெனக்குச்சொல்லு-முத்தியென் றசத்தியாம் வாலைப்பெண்டான் , பத்தியென்றபத்தியது சித்தி கோடி - பகரார்களுதர்கடாம் பண்பாத்தானும் , பத்தியென்ற வாறேதோவெனக்குச்சொல்லும் - பராசத்திமகிமைய துபச்சை

வன்னம், அத்தியென்றாலத்தியஃ தார்தாஞ்சொல்வா ரடிமுடியினுள்ளிருந்தவானையாமே. (௯௰)

ஆனையென்றவாறேதுசொல்வீரையா-வானையென்றரசமது தான்விந்துபாரு, ஆனையென்றாலானையதுமதத்தயானை-யப்பெரியயானைதனையார்தாம்வெல்வார், ஆனையென்றவாறதனைச்சொல்வீரையா-வரிவைவிந்துநாதமதினைஞ்சாஞ்சுத்தி, சோனையென்ற சோனையஃ தண்டவேர்தான் - சொல்லாதமவுனமது சொல்லக் கேளே. (௯௧)

சல்லிவேர்.

கேளென்னச்சீடன்மகிழ்ந் தேனையாளென்று-கேட்டதிறற் கோனென்றும் பரனென்றும்பார், நாளென்றுநானறிந்தவணஞ் சொல்லக்கே-ணுனென்றவிந்ததுதான் விருட்சமாகும், சூளென் ற்சொல்லதுதான் சொல்வீரையா-துகளிலாச்சோதியே யாதியாகும், வேளென்றவேளர்ன விவரந்தன்னை - விளம்புகிறேன் சல்லிவே ரென்றுபேரோ. (௯௨)

பேரான்பேரதுதா னண்டப்பேராம்-பேசுதற்கு நாவெழு மோபேசார்பேசார், சீரானசோறதுதான் மதனச்சோறு-செப்பரியசோதிமர வேர்தான்சோறு, ஆரானவாறதுதா னண்டவாறு மாயிரத்தெட்டண்டமட்டு மளாவும்பாரு, நீரானசாறதுதானண் டச்சாறு-திகழ்த்துசல்லியமெனுமோர் கொல்லிவேரோ. (௯௩)

கொல்லிவேர்.

கொல்லும்வேர்வெல்லும்வே ரொன்றுபேராங்-கூறுமொரு சல்லியமாமரத்தின்வேரு, கல்லும்வேர்புல்லும்வேரண்டவேரு-கருவிருந்தவண்டவேரிதற்குப்பேராம், சொல்லும்வேர்நில்லும் வேரொன்றுபேராஞ் சொற்பெரியகல்லுப்பென்றிதற்குப் பேராம், அல்லும்வேர்வெல்லும்வேர்குருவின்வேரோ-டண்டத்தின்மர மென்றுமிதற்குப்பேரோ. (௯௪)

மரமென்றாலென்னமரஞ்சொல்வீரையா - மகத்தானவண் டத்தின்மரந்தானையா , வரமென்றாலென்னவரஞ் சொல்வீரையா-வழலையென்ற வாலைரசமரந்தான்பாராய் , சரமென்றாலென் னசரஞ்சொல்வீரையா-சாற்றரிய சல்லிவேர்ச் சரந்தானையா, அரமென்றாலென்னவரஞ்சொல்வீரையா - வகண்டமென்ற வகண்டத்தின்மரத்தின்பேரோ. (௯௫)

பேரானபெயர்களெல்லாம் வெளியதாகப் - பேசினேன்புலத்திய வைஞ்சாங்காண்டத்தில் , பாரறியபதினெண்பேர் மறைப்பையெல்லாம்- பகல்போலேவிளக்கிவிட்டேன் பண்பாப்பாரு, சீராகவெவர்களிவ் வண்ணஞ்சொன்னார்-சீர்தூக்கிப்பார்க்கி னிலை

யாரென்னவய, ஆரானவனாகுறைக ளற்றுப்போக- வாதிதொட்ட ந்தமட்டுமலறைந்திட்டேனே. (௯௫)

அஃறந்திட்டேனிந்நூலை வெளிவிட்டோர்க- ளண்டவிடிவி ழுந்துதலை தெறித்துப்போவார், குறைந்துமதிகுரு மொழியை வெளிவிட்டக்காற் - கோடியிடியவர்தலையில விழுமன்றேபார், சிறந்தபுகழ்ச்சத்கோடி ரிஷிகள்சாபஞ்-செகற்குருவின்சாபமது வந்துசாரும், மறிந்தோடச்சாபங்க ளனைத்துந்தீர்த்தேன்- மகத் தானவைந்நூற்றை யடக்கம்பண்ணே. (௯௭)

பண்ணப்பாபராபரத்தின் கிருபையாலே-பாரித்தேனனைத் தினுக்கும்பெயருஞ்சொன்னேன்,கண்ணப்பாகண்மணியேசாற் றிவொண்ணுக்-கருவெல்லாமுன்றனக்குக்கருத்தாச்,சொன்னேன்; விண்ணப்பாவிண்ணுக்குண்மணியேயென்றன்-வேதாந்த சித்தரு க்குள் விளங்கும்வாழ்வே, நண்ணப்பாநாதாந்தப் பொருளைப் போற்று-நயமாகவென்குருவு முரைத்தார்காணே. (௯௮)

காணவென்றுநெடுந்தூரமென்றேவாடிக்-கலங்காதே யெ ன்மகனேகருவைக்கண்டு, மாணவென்றுனல்லவழி யிஃதென்றே கி-மகத்தானவண்டசராசரங்களெல்லாம், காணவேகண்டு தெளிந் திடுதிமாறுக்-கருணைபொழியென்குருவாங்குமரவேளும், யாண ர்நிறையாதியந்தமிதுவேயென்று-மண்டசத்தசாகரமு மிதுவெ ன்றுரே. (௯௯

இதுவன்றேவண்டபகிரண்டமென்று - மிதமானவண்டம் பேரண்டமென்றும், பதியென்றபரமென்றேயைஞ்சாங்காண்ட ம்-பகருகின்றபேரண்டப்பதியாமென்றும், மதியொடுசீர்மவுன வண்டமிதுவேயென்று-மகத்தானவென்குருவுமுபதேசித்தார்,ச துர்பெறுசற்குணநிதியேயறிந்துவாழ்த்தி-சாற்றுபரிபாடைமுற் றுமுற்றிற்றன்றே. (௱)

ஐந்தாங்காண்டம்-முற்றிற்று.

அகத்தியமுனிவர்-அருளிச்செய்த

# பரிபாஷைத்திரட்டு

முற்றிற்று.

ஆக காண்டம்-௫-விருத்தம்-௫௱௨.